# ஹெரிட்டேஜர் தமிழ்

மரபுசார் மாத இதழ்
ஜூன் 2018

தேடல்
துவங்கியது...

www.heritager.org

ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையா னுழை.

# ஹெரிட்டேஜர் தமிழ்

தேடித் தெரிந்து தெளிவுருவோம்

பயணம் : ! பதிவு : 1

“ஹெரிட்டேஜர் தமிழ்” இதழினை, தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சார்பாக, மின்னிதழாக வெளியிடுவோர், இராஜசேகர் பாண்டுரங்கன்.

நிர்வாக ஆசிரியர்: ரா. வித்யாலட்சுமி
பொறுப்பாசிரியர்: பி. தனசேகரன்
துணை ஆசிரியர்: கா. விசயநரசிம்மன்

கட்டுரை ஆசிரியர்கள்:
இளமதி
சரண்யா பத்ரி
பெருவாகை கொண்டான்
தாமரை
ஆதித்ய வர்ஷினி
ராஜசேகர் பாண்டுரங்கன்
AT. மோகன்
சுரேஷ்
ரா. வித்யாலட்சுமி
பி. தனசேகரன்
கா. விசயநரசிம்மன்

கட்டுரைகளை அனுப்ப: news@heritager.org
ஆர்வலர் குழுவில் சேர: https://goo.gl/OylfgB

ஹெரிட்டேஜர் தமிழ் இதழ்,
தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கம்,
26, முதல் தெரு, ராமலிங்கா நகர்,
நெற்குன்றம்,
சென்னை. 600107

தொலைப்பேசி: 9786068908

இந்த இதழின் நோக்கம், மரபு சார்ந்த செய்திகளைப் பகிர்தல் மட்டுமே.

மற்ற எவ்வித ஆதாய நோக்கமும் இல்லை.

அட்டைப்படம்: ராஜசேகர்

வணக்கம்,

தேமதுரத்தமிழோசை உலகெல்லாம் பரவும் வகை செய்யவும், மரபென்றும் இலக்கியமென்றும் வரலாறென்றும் வந்த பின்பு அதற்கு மொழியென்ன? பேதங்களென்ன? என்ற விசாலமான பார்வையில் மரபு சார்ந்த விடயங்களை நாடி, ஓடி, பார்த்து, படித்து உணர்ந்தவற்றை உலகெல்லாம் சொல்ல விழையும் ஆர்வலர்களின் சிறுமுயற்சியே இந்த இதழ் !

ஆராய்ச்சியாளராக ஒரு விடயத்தை அறிந்து எழுத அந்தத் துறை சார்ந்த பின்புலம் அவசியமாகிறது ஆனால் ஒரு ஆர்வலனாக எழுத ஆர்வமும் பரந்த கண்ணோட்டமுமே போதும், நம்மைச் சுற்றியுள்ள வரலாற்று விடயங்கள், மரபு சார்ந்த பழக்கவழக்கங்கள், கட்டடங்கள், கலாசார விடயங்கள், மொழி, பண்பாடு, இலக்கியங்கள் போன்றவற்றை நேசிக்கும் ஆர்வலர்கள் கூடித் தத்தம் படைப்புக்களை உலகத்துக்கு அளிக்கும் ஒரு தளமாக இந்த இதழ் இருக்கும்.

எழுதுவோம், பிழைசெய்வோம் நாமே திருத்துவோம் பின்பு அதில் பாண்டித்யம் கொள்வோம் என்பதே தாரக மந்திரமாகக்கொண்டு, நமது வரலாற்றுப் பெருமையையும், பாரம்பரியத்தையும் உலகறியச்செய்து அடுத்த தலைமுறைக்குக் கொண்டு சேர்க்கும் பெரும் பொறுப்பு நம்மிடம் உள்ளது.

ஏர் பிடிக்கும் கைகளால் நாடும் வீடும் செழிப்பது போல எழுதுகோல் பிடிக்கும் கைகளால் தெளிந்த அறிவும் விழிப்புணர்வும் கண்டிப்பாக சமூகத்தில் ஏற்படும் என்ற நம்பிக்கையோடு, பெரியவர்முதல் சிறியவர்வரை விரும்பும் ஒரு இதழாக வடிவமைக்க இருக்கிறோம்.



மரபை நேசிக்கும் ஒவ்வொரு சராசரி நபருக்கும் இந்த இதழ் பயனுள்ளதாகவும் அவர்களையும் மரபு சார்ந்த விடயங்களை நோக்கி இழுக்கும் காந்தமாகவும் இருக்கும் என்று தெரிவித்துக்கொள்கிறோம்.

ஆய கலைகள் அறுபத்தி நான்கும், தூய தமிழ் மூன்றும், எண்ணற்ற இலக்கண இலக்கியங்களும், பானை ஓடுகள்முதல் பாறைகள்வரை எழுதப்பெற்ற கல்வெட்டுகள், சுவடிகள், பயணங்கள், அனுபவங்கள், வரலாற்றுச் சிறப்பு மிக்க இடங்களின் பின்புலங்கள், புத்தங்கங்கள், கவிதைகள், கடல் கடந்த நாடுகளின் சிறப்புகள் என இந்த இதழின் பக்கங்களை நிறைக்க இருக்கிறோம் உங்கள் ஆதரவுடன் !

**- தனசேகர் பிரபாகரன்**
**பொறுப்பாசிரியர்**

அனைவருக்கும் வணக்கம் ,

இந்தக் கட்டுரையைப் படித்துக் கொண்டிருக்கும் நீங்கள் ஏதோ ஒரு வகையில், வரலாற்றை நோக்கியத் தேடலில் உள்ள ஆர்வலராக இருக்க அதிகம் வாய்ப்புள்ளது.

இன்றிலிருந்து சுமார் மூன்று ஆண்டுகளுக்கு முன்பு, தமிழக மரபுசார் ஆர்வலர்கள் குழு தனது பயணத்தைத் துவங்கியது. கள்ளக்குறிச்சிக்கு அருகில் உள்ள தச்சூர் கிராமத்தில் பல்லவர்காலக் கோவில் ஒன்று அதிகம் அறியப்படாமல் பாழடைந்து மண்மேடாக இருந்த, கோவிலை அரசு அனுமதியின்றி எவ்வித அகழாய்வுகளையும் நடத்தாமல் புதுப்பித்தார்கள். இதன் வரலாற்றையும், கலைநயத்தையும் அறியாமல் முழுக் கோவிலையும் தகர்த்து அதன் சிலைகள் கீழே போடப்பட்டன. வரலாற்று ஆர்வலர்களைத் திரட்டி அச்சிலைகளைப் பாதுகாப்பாக எடுத்துவைக்க நேரிடையாக கோவிலுக்குத் தச்சூர் சிலை மீட்புக் குழுச் சென்றது.

அதன் பயனாக சல்லிக் கற்கள் மீதும், மண் மீதும் போட்டுப் புதைக்கப்பட்ட அச்சிலைகள் பாதுகாப்பாக ஒரு மண்டபம் கட்டி எடுத்து வைக்கபட்டன. முகநூலில் விளையாட்டாக பழங்கதை பேசி மட்டும் இருக்காமல் அனைவரும் தங்கள் ஊரில் உள்ள மரபுச் சின்னங்களை அறிந்து, அவற்றுக்கு பாதிப்பு ஏற்படும் போது குரல்கொடுக்க மக்கள் குழு ஒன்றை உருவாக்க வேண்டும் என்ற நோக்குடனும், அக்குழு எவ்வாறு இணைந்து ஆவணம் செய்யவேண்டும் என்பது பற்றியும் பல மாவட்ட வரலாற்று ஆர்வலர்களுடன் இணைந்து உருவாக்கப்பட்டதே ”தமிழக மரபுசார் ஆர்வலர்கள் அமைப்பு”.

இன்று, பல படிக்கற்களைக் கடந்து எங்களோடு கைக்கோர்த்துப் பயணம் செய்யும் அனைவருக்கும் இந்த மாத இதழைக் காணிக்கையாக அளிக்கின்றோம்.

**- வித்யா லட்சுமி**
**நிர்வாக ஆசிரியர்**



# பறவைகளைத் தேடுவோம்

ஜூன்-5, உலக சுற்றுச்சூழல் தினத்தை முன்னிட்டு திருவாரூர் மாவட்டம், முத்துப்பேட்டை ஒன்றியம், கள்ளிக்குடி, ஊராட்சி ஒன்றிய நடுநிலைப் பள்ளியில் இன்று தேசிய பசுமைப்படை, சுற்றுச்சூழல் மன்றம் மற்றும் அக்னி சிறகுகள் அறிவியல் மன்றத்தின் சார்பாக மாணவர்களுக்குச் சுற்றுச்சூழல் விழிப்புணர்வு மற்றும் தமிழ்நாட்டுப் பறவைகளின் புகைப்படக் கண்காட்சி நடைபெற்றது.



இந்நிகழ்விற்கு பள்ளியின் தலைமையாசிரியர் வாசுகி தலைமையேற்றார் முத்துப்பேட்டை வட்டார வளமைய ஆசிரியர் பயிற்றுநர் முத்தண்ணா முன்னிலை வகித்தார், கணித பட்டதாரி ஆசிரியர் வீரபாண்டியன் வரவேற்புரை நிகழ்த்தினார்.



அதைத்தொடர்ந்து பறவைகளின் புகைப்படக் கண்காட்சியை ஆசிரியர் பயிற்றுநர் முத்தண்ணா திறந்து வைத்தார், தலைமையாசிரியர் மற்றும் உதவி ஆசிரியர்கள் இந்திரா, அகிலாண்டேஸ்வரி, மாலதி ஆகியோர் குத்துவிளக்கேற்றி கண்காட்சியை பார்வையிட மாணவர்கள் அனுமதிக்கப்பட்டனர்.

பறவை ஆர்வலர் வேதமணி ஒவ்வொரு புகைப்படமாக மாணவர்களிடம் காட்டி அப்பறவையின் பெயர், குணாதியம் மற்றும் சிறப்பம்சம் குறித்து விரிவாக மாணவர்களிடம் கலந்துரையாடி எளிமையாக விளக்கினார்.



வலசைபோதல், சுற்றுச்சூழல் சீர்கேடு, பல்லுயிர் பெருக்கம், சரணாலயங்களின் பயன்கள், பறவைகளின் புகழிடம், மரங்கள் மற்றும் காடுகளின் முக்கியத்துவம் எனும் தலைப்புகளில் சிறு கலந்துறையாடல் நிகழ்வுற்றது. அறிவியல் மன்ற ஒருங்கிணைப்பாளர் சுரேஷ் நன்றியுரை கூற விழா இனிதே நிறைவுற்றது.





# கிறுக்கலாம் வாங்க




தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கத்தின் முதல் பொது நிகழ்வான கிறுக்கலாம் வாங்க நிகழ்வு கடந்த ஜனவரி 26 தேதி நடந்தது. இந்நிகழ்விற்கான யோசனையும், அதற்காக நமது குழு மேற்கொண்ட முயற்சிகளும் அம்முயற்சிகளின் பலனாக மக்களிடம் ஏற்பட்ட விழிப்புணர்வும் குறித்த நமது குழுவினரின் அனுபவப் பாடங்களை இங்கே பகிரவிருக்கிறேன்.

கிறுக்க முடிவெடுத்தல்

தீபாவளிக்குப் பிறகு பாரம்பரிய சின்னங்கள் குறித்த விழிப்புணர்வை மக்களிடம் கொண்டுசேர்க்க வேண்டும் என்ற எண்ணம் நமது குழுவினரிடம் மேலோங்கியது. அதன் விளைவாக நடைபெற்ற சந்திப்பில் ஆனந்தகுமார் மற்றும் கிரீஷ் இருவராலும் ஒரு விழிப்புணர்வு நிகழ்ச்சிக்கான யோசனை பகிரப்பட்டது. அதன் பிறகு ஒரு வாரம் குழுவினருடன் கலந்து ஆலோசித்து நிகழ்ச்சிக்கான முன்னேற்பாடுகள் குறித்து சில முக்கிய முடிவுகள் எடுக்கப்பட்டன.

ஆலோசனையில் எங்கு நடத்தலாம், முன்னனுமதிகள், அழைப்பிதழ் விழிப்புணர்வு துண்டு பிரசுரங்கள் , நமது குழுவின் கடந்த இரண்டு வருட செயல்பாடுகள் குறித்த புகைப்பட தொகுப்புகளை காட்சிபடுத்துதல், உணவு போன்ற விடயங்கள் விவாதிக்க பட்டன. இறுதியாக நிகழ்ச்சிக்கு ”கிறுக்கலாம் வாங்க” என பெயரிடப்பட்டது.

தலைப்பும் நோக்கமும்

கிறுக்கலாம் வாங்க கேட்டவுடன் கவரும் பெயராக அமைந்தது. முதல் முதலாக நிகழ்விற்கான விளம்பரங்களுக்காக சில தொலைகாட்சி அலுவலகங்களை அணுகினோம். ஆனால் அவர்கள் இந்த நிகழ்வினை நடத்துவதன் மூலம் எங்களுக்கு என்ன கிடைக்கும்..? என்ற கேள்வியை முன் வைத்தனர். ஒரு தொலைக்காட்சி நிறுவனர் மட்டும் அவர்களது தொலைகாட்சியின் லோகோ வை விழிப்புணர்வு துண்டு பிரசுரம் அல்லது விளம்பர பிரசுரத்தில் பதிவு செய்து மாதிரி பிரசுரம் கொண்டு வந்தால் நிகழ்வு குறித்த விளம்பரங்களை ஒளிபரப்புவதாக ஒத்துக்கொண்டார்.

கடைக்கு திரும்பி வந்த உடன் துண்டு பிரசுரங்களுக்காக சில துணிக்கடைக்காரர்களை அணுகினோம். அங்கும் ஏமாற்றமே மிஞ்சியது. ஒரு தன்னார்வலர் குழுக்கு இது இயல்பு என்று, மீண்டும் கடைக்கு திரும்பிய நாங்கள் அடுத்தகட்டம் குறித்து விவாதித்தோம். அடுத்த கட்டமாக துண்டு பிரசுரத்திற்கு தேவையான விடயங்களை பெருவாகை தயார் செய்வதாகவும்



நிகழ்விற்குத் தேவையான ஸ்பான்சர் மற்றும் அடிப்படை ஏற்பாடுகளை ஆனந்த் அவர்களும் கவனித்து கொள்வதாக முடிவு செய்தோம். இரு நாட்கள் கடந்தது.

நிகழ்விற்கான இடம் மற்றும் அனுமதி

நிகழ்ச்சியின் பெயர், நோக்கம் தயாரானவுடன் நிகழ்ச்சியை ஜனவரி 26 அன்று நடத்த முடிவெடுத்தோம். அதன் தொடர்ச்சியாக வா.உ.சி மைதானம் , பூங்கா , அருங்காட்சியகம் என சில இடங்களைத் தெரிவு செய்தோம். ஜனவரி 26 குடியரசு தினத்தை முன்னிட்டு வா.உ.சி மைதானத்தில் கொடியேற்றம் நடைபெறும் என்பதால் அங்கு அனுமதி கிடைப்பது கடினம்.

எனவே அரசு அருங்காட்சியகத்தை அணுகினோம். அருங்காட்சிய காப்பாளர் சிவகுமார் அவர்கள் எங்களது முயற்சியைப் பாராட்டி எங்களுக்குத் துணை நிற்பதாகவும், விடுமுறை தினம் என்பதால் அருங்காட்சியக முகப்பில் உள்ள இடத்தை உபயோகப்படுத்திக் கொள்ளவும் அனுமதி வழங்கினார். எங்களுக்கு அறுபது நாட்களே இருந்த நிலையில் ஏற்பாடுகளை துரிதமாக்கினோம். ஒருபுறம் ஆனந்த் அவர்கள் நிகழ்ச்சிக்குத் தேவையான பொருட்கள் , தட்டிகள், போன்றவற்றிக்காக உழைத்துக்கொண்டிருந்தார். மறுபக்கம் பெருவாகை மற்றும் ராஜசேகர் ஆகியோர் துண்டு பிரசுர தயாரிப்பில் ஈடுபட்டோம். இடையில் காப்பாட்சியரது ஆதரவும், ஊக்கமும் எங்களை வேகமாக செயல்பட வைத்தது.

இறுதிக்கட்ட ஏற்பாடுகள்

நாட்கள் கடந்தன விளம்பரங்கள் முகநூலில் மட்டுமே பதிவிடப்பட்டன. குழுவினரின் பெரும் முயற்சியால் அனைத்து திசைகளிலும் பகிரப்பட்டன. கிறுக்கல்களுக்கு தேவையான பென்சில்கள், தாள்கள் , அட்டைகள் போன்றவை முந்தைய நாள் இரவில் ஒரு மொத்த விற்பனையாளரிடம் வாங்கினோம் . மேலும் தமிழக மரபுசார் குழுவினரின் செயல்படுகளுக்கான புகைப்படங்களைத் தயார்செய்தோம்.அடுத்தநாள் காலை பேனர் கட்டுதல் , மேசை தயார்செய்தல் போன்ற வேலைகள் நண்பர்களாலும் குழு உறுப்பினர்களாலும் முடிக்கப்பட்டது.

கிறுக்கலாம் வாங்க நிகழ்ச்சி

காலை எட்டு மணிக்கெல்லாம் அருங்காட்சிய முகப்பில் கூடினோம். குமாரவேல், ஆனந்த், பெருவாகை மூவரும் நண்பர்களுடன் சேர்ந்து

விழிப்புணர்வு தட்டிகளை நிறுத்தினோம். தமிழரசி, அதித்யவர்ஷினி, சிந்து ஆனந்தகுமார், ஞானசேகர் ஆகியோர் இணைந்து புகைப்பட காட்சிபடுத்துதல், கிறுக்கலுக்கான பொருட்களை முறைபடுத்துதலிலும் ஈடுபட்டனர்.

அனைத்து ஏற்பாடுகளும் நிறைவடைந்தவுடன் நிகழ்ச்சியின் நோக்கம் குறித்தும் விழிப்புணர்வு குறித்தும் மீண்டும் ஒருமுறை குழுவுடன் கலந்தலோசிக்கபட்டது. அதன்படி பங்கேற்பாளர்களிடம் தொல்லியல் மாந்தர்களின் கிறுக்கல்களின் பரிணாமம், முக்கியத்துவம், தேவையற்ற கிறுக்கல்களால் தற்போதைய தலைமுறை மரபு சின்னங்கள் சிதைக்கப்படுதல் போன்றவை குறித்து விழிப்புணர்வு தரவும், மரபு சின்னகளை பாதுகாக்கும் வழிமுறைகள் குறித்தும் விளக்கம் தர முடிவு செய்யப்பட்டது.

துவக்கம்

அருங்காட்சியக காப்பாளர் சிவக்குமார் அவர்கள் நிகழ்வினை துவங்கிவைத்தார். பள்ளி மாணவர்கள், குழந்தைகள், கல்லுரி மாணவர்கள், பொதுமக்கள் என கிட்டதட்ட இரண்டாயிரம் பேருக்கும் மேற்பட்டோர் பங்கேற்றனர். குறிப்பாக நிகழ்வில் பங்கேற்ற வடஇந்தியர்களுக்கு வாசன் அவர்கள் அவர்களது மொழியில் அவர்களுக்குப் புரியும் விதத்தில் எடுத்துரைத்தும், கிரீஷ் அவர்களின் விழிப்புணர்வு உரையும், ஞானசேகர், குமாரவேல் அவர்களின் ஈடுபாடும் நிகழ்ச்சி சிறப்புற நடைபெற வலு சேர்த்தது.

நிகழ்வில் பங்கேற்ற சிறுவர்களின் கிறுக்கல்கள் பல அனைவரையும் வியப்புற வைத்தது. காப்பாட்சியர் சிறந்த கிறுக்கல்களை அடுத்த ஒருவாரம் அருங்காட்சியகத்தில் காட்சிபடுத்தபடும் என ஏற்கனவே கூறியிருந்தார். அதன் படியே மழலைகளின் சிறந்த கிறுக்கல்கள் கட்சிபடுத்தபட்டன. நம் குழுவினரின் கூட்டு முயற்சியால் நிகழ்ச்சி மாபெரும் வெற்றியடைந்தது.

- பெருவாகை கொண்டான்



# தோல்விகளுக்குத் தயார்படுத்துங்கள்

ஒருமுறை என் அப்பா நான் தோற்றபோது என்னை நடத்தியவிதம் மிக நேர்த்தியாக இருந்தது நியாபகம் உள்ளது. நிறைய பேச்சுப்போட்டிக்குச் சென்று இருந்தாலும், வெற்றி தோல்விகள் ஒவ்வொரு முறையும் பல்வேறு விதமான உணர்வுகளை நமக்குத் தருகிறது. வெற்றிகள் அதிகம் கொண்டாடப்பட்டதில்லை, ஆனால் தோல்வி? அப்படியும் ஒரு வழி உண்டென்பது, அன்று எனக்குப் புரிந்தது.

போட்டி முடிந்து வீடு திரும்பிய கணம்முதல் யாரோடும் பேசவில்லை, அமைதியாய் அமர்ந்து எங்கு சரியாக பேசவில்லை என்று எண்ணியதை விட, இந்தத் தோல்வி என்னை என்ன செய்யப்போகிறது என்ற பயம் அதிகமாய் இருந்தது. இரவு அப்பா வந்து, போட்டியின் முடிவுகள் என்ன? என்று ஒரு சொல் கேட்ட நொடி, அத்துணை நேரம் அடக்கிய உணர்வுகள் உடைந்து விசும்பலாய் ஆரம்பித்து அழுகையாய் நிறைந்தது! பயந்தேவிட்டது வீடு! சரி, இப்போ இல்லனா அடுத்த முறை வாங்கலாம் ... இல்லை நான் நிறுத்தவே இல்லை ! வெளியே போகலாம் என்று சொல்லி, கிளப்பிக்கொண்டுபோய் ஒரு உணவகத்தில் அமர்ந்து ஏதும் பேசாமல் உண்டு முடித்தோம். என் அப்பா நிறைய படித்தவரெல்லாம் இல்லை , ஆனாலும் அப்படி ஒரு புரிதல் இன்று நினைத்தாலும் அழகானது! மீண்டும் அப்பா விட்ட இடத்திற்கே வந்தார், எவ்ளோ போட்டிகள் வெற்றி கிடைச்சிருக்கு, இன்னிக்கு வரலைனா என்ன இப்போ? அடுத்தமுறை, அதற்கு அடுத்தமுறை என்று நிறைய இருக்கு., இதுக்கு யாராச்சும் அழுவார்களா ? என்று சொல்லி முடித்தார்.

நிறைய தேவையாய் இருந்தது அந்தப் பேச்சு! வெற்றியையும் தோல்வியையும் அவர் பார்த்தவிதம், எனக்கு அறிமுகம் செய்தவிதம் எல்லாமே எப்போதும் அந்த புரிதலின் வளர்ச்சி என்றுதான் நான் நினைக்கிறன்.

இன்றைய காலகட்டத்தில், பிள்ளைகளை வெற்றிகளுக்கு மட்டுமே தயார்படுத்தும் நிலை உள்ளது. சிறு தோல்வியையோ, மறுப்பையோ



பிள்ளைகள் ஏற்க மறுக்கின்றனர் அல்லது அதற்கான தளம் அவர்களுக்குத் தரப்படவில்லை. வெற்றி மட்டுமே வாழ்க்கை முழுதும் கிடைக்கப்போவதில்லை. எண்ணியது கிடைக்க போராட்டம் வேண்டும், ஆனால் அதன் வெற்றி மட்டுமே ஒரு முழுமையான நிறைவைத் தரும் என்ற எண்ணம் நிறைந்து காணப்படுகின்றது இன்று. பெற்றோர், சமூகம், பள்ளி, கல்லூ ரி என்று எல்லாமும் இதற்குக் காரணம். முதல் மதிப்பெண் பெற்ற பிள்ளை புகழப்படுவதும், கடைசி மதிப்பெண் பெற்ற பிள்ளை திட்டு வாங்கி, இகழப்பட்டு, அவமானப்படுவதும் பிள்ளைகளின் மனத்தில் முதல் என்ற வார்த்தைக்கான புரிதலை மாற்றுகிறது,

முதலில் சாப்பிடுபவன், முதலில் விளையாடி முடிப்பவன், படித்து முடிப்பவன், எழுதி முடிப்பவன், வேலைகளைச் செய்து முடிப்பவன், என்று எல்லா இடத்திலும் "முதல்" என்ற ஒற்றை வார்த்தையின் பின்னால் ஓடத் தூண்டுகிறது. பெற்றோருக்கு இந்தப் புரிதல் இல்லாது போனால், பிள்ளைகள் அந்த மனநிலைக்குத் தள்ளப்படுவது உறுதி.

போட்டி என்பதெல்லாம் சரி, ஆனால் அது அடுத்த தலைமுறையை அடுத்தக்கட்ட வளர்ச்சிப் பாதைக்கு அழைத்துச் செல்லவேண்டும். ஆனால், மதிப்பெண், பரிசு என்ற பெயரில் அவர்களை அவர்கள் வளர்த்துக் கொள்வதற்குப் பதில், வீழ்ந்த இடத்தில் நின்று அதற்காக வருந்தி , அதிலிருந்து மீள முடியாமல் வெறுத்துப்போய் நிற்கிறார்கள்.

சிறுசிறு மறுப்புகளுக்கும், விளையாட்டில் தோல்வியையும் , வாழ்க்கையில் கல்விமுறை மட்டுமே அவர்களின் முன்னேற்றத்தைத் தீர்மானிக்க போவதில்லை என்றும், நினைப்பதெல்லாம் கிடைத்து விடும் என்ற எண்ணத்தையும், பிறரின் திறமைகளை மதிக்கவும், அதை நேர்மறையாக நோக்கவும், சொல்லித்தாருங்கள். சமுதாயத்தில் நல்ல மனிதர்களாக வாழப் பெற்றோரின் பங்களிப்பு அவசியம். யாரோடும் ஒப்பிட்டுப் பேசும்போது , அவர்களையும் சேர்த்துப் பிள்ளைகள் வெறுப்பார்கள். நிறைய போட்டிகளற்ற விசயங்களுக்கு அவர்களை அறிமுகம் செய்து பாருங்கள்.

நானும் படிக்கும்போது , நிறைய பரிசுகள் வாங்கி இருக்கிறேன். ஆனால் , அவை எவையும் இப்போது எதற்கும் பயன்படுவதில்லை. ஆனால், அன்று "வெற்றி" என்ற ஒன்றை நோக்கி மட்டுமே செலுத்தப்பட்டுப் பெறப்பட்டது. படித்த புத்தகங்கள், பழகிய மனிதர்கள், நட்புகள், விட்டுக்கொடுத்த நொடிகள், அன்பு , புரிதல் இவை எதற்கும் போட்டியோ, பரிசோ , அங்கீகாரமோ இல்லை, ஆனால் இவை நம் வாழ்வின் மிக முக்கிய பங்கு வகிப்பவை.

முந்தைய பதிவை படிக்கும் போது , சிலர் என்ன நினைத்திருப்பீர்கள் , எல்லாம் சுலபமாகச் சொல்லலாம் , அவனவன் கஷ்டம் அவனவனுக்குத்தானே தெரியும்? வீட்டிற்கு வரும் எல்லாரும் முதல் கேள்வியாக என்ன கேட்கிறார்கள், பையன் ∴பெண் நல்லா படிகின்றானா?, என்ன ரேங்க் ? என்ன பரிசு வாங்கி இருக்கான் இந்த வருஷம், மற்ற கோச்சிங் என்ன போறான்? இப்படிக் கேள்விகளை இந்த சமூகம் அடுக்கிக்கொண்டே போகும். ஆமாம் என்று சொன்னாலும், இல்லை என்று சொன்னாலும் கஷ்டம்தான். எல்லாப் பிள்ளையும் ஒன்றைப் போலவா உள்ளனர்? எல்லாருக்கும் எல்லாமும் தெரிய என்ன அவசியம்?

இப்படிக் கேட்கின்ற யாரும் யோசிக்காத விஷயம், அல்லது கேட்காத விஷயம் பிள்ளையோ பெண்ணோ அன்பாய் இருக்கின்றனா? எல்லோருடனும் சகஜமாக பழகுகின்றானா? எல்லா விசயங்களையும் பெற்றோரோடு பகிர்ந்துகொள்கிறானா? அவனை இவர்கள் எப்படி வழி நடத்துகிறார்கள் போன்ற முக்கிய கேள்விகளை!

சிறு வயதில் மதிப்பெண், போட்டியின் பின் ஓடவிட்டு, வளர்ந்தபின் சம்பாத்தியத்தின் பின் ஓடவிட்டு, பிறகு பிள்ளை என்னைப் பார்க்கவில்லை, வெளிநாடு சென்றுவிட்டான் , என்னை முதியோர் இல்லத்தில் விட்டுவிட்டான் என்று புலம்புவது எப்படி நியாயம். அவர்கள் எதன் பின்னோ ஓடவே பழக்கப்படுகிறர்கள் பெரியவர்களால்.

நிறைய இழந்துவிட்டோம், பெரியவர்களால் வழிநடத்தப்படும் குடும்பம், அனுபவங்களைக் கதைகளாய்ச் சொல்லிய திண்ணை, பகிர்ந்துகொள்ளும் சந்தோசம் தரும் சகோதரத்துவம் , விளையாட்டின் வழி தோல்வியையும் , விட்டுக்கொடுத்தலில் வெற்றியும், இன்னும் நிறைய... கிடைக்குமா என்று தெரியவில்லை, ஆனாலும் உறவுகளும் அதன் வழி கற்றலும் நின்றுவிட்டது.

- **வித்யா லட்சுமி**

# உலக அருங்காட்சியக தினம்...



அருங்காட்சியகங்கள் எப்போதுமே என்னை ஈர்க்கும் இடங்களில் ஒன்று. தமிழகத்தின் பெரிய அருங்காட்சியகம் சென்னையில் உள்ளது என்றாலும் கூட, அதை "செத்த காலேஜ்" என்றே என் சிறு வயதில் நான் அறிந்திருக்கிறேன். என் சிறுவயதில் யாரும் என்னை அழைத்துச் சென்று இதையெல்லாம் காண்பிக்கவே இல்லை . நான் முதல் முதலாக சென்னை அருங்காட்சியகம் சென்ற போது, நான் கல்லூரியில் மூன்றாம் ஆண்டு படித்துக்கொண்டிருந்தேன்.

என்னத் தான் அப்படி வைத்திருக்கிறார்கள் ? என்று அறிந்து கொள்ளவே சென்றேன். தனியாக, அன்றைய தினம் மிக அருமையானதாக அமைந்தது. அவ்வளவு கற்சிலைகளையும், கல்வெட்டுகளையும், செப்புத் திருமேனிகளையும், குழந்தைகளுக்கான அழகிய கண்காட்சியும், அளவிட முடியாத புத்தகங்களையும் கொண்டதாய் இருந்தது சென்னை அருங்காட்சியகம்.
எத்துனை முறை போனாலும் புதிதாகப் பார்ப்பதாய் ஒரு உணர்வு. ஏதாவது ஒரு சாக்கு வைத்துக்கொண்டு எல்லா ஊரிலும் உள்ள அருங்காட்சியகங்களைப் பார்த்துவிடும் ஆசை வந்தது.

என் இளங்கலை ஆய்வறிக்கைகாக காஞ்சிபுரம், வேலூர், தஞ்சாவூர், கங்கை கொண்ட சோழபுரம், புதுக்கோட்டை திருச்சி, மல்லை, மதுரை மாவட்டங்களில் உள்ள அருங்காட்சியகங்களைப் பார்த்து வந்தேன். அதற்காகவே அருங்காட்சியகம் வடிவமைக்கும் தலைப்பை ஆய்வில் இணைத்துக்கொண்டேன்.

இதில் நான் அதிக அளவில் சென்று வந்தது புதுக்கோட்டை மாவட்ட அருங்காட்சியகம். நான் முதலில் சென்ற போது ஒரு சிறிய கட்டிடத்தில் இருந்தது. ஆனால், புதுக்கோட்டை அருங்காட்சியகத்தில் தான் தமிழகத்தின் இரண்டாவது பெரிய சேகரிப்புகள் கொண்ட அருங்காட்சியகம். அங்கு சிற்பங்கள், செப்புப் பட்டயங்கள், கற்காலக் கருவிகள், படிமங்கள், அரிய வகை விலங்குகள், எலும்புகள், செடி வகைகள், மரச் சிற்பங்கள், ஆங்கிலேயர் காலத்தில் பயன்படுத்தப்பட்ட ஆயுதங்கள், உடைகள் என நிறைந்து கிடந்தது.

பல அருங்கட்சியங்களிலும் உள்ள ஒரு பொருள், பழங்காலக் காசுகள். அதிலும் சோழர் காலக்

காசுகள் பார்க்க அதிக ஆசை, அதனால் தஞ்சை, கும்பகோணம் பகுதியில் உள்ள அருங்காட்சியகம் செல்ல நினைத்தேன். கும்பகோணத்தில் நான் அருங்காட்சியகங்ளைப் பார்த்தது இல்லை. ஆனால், தஞ்சை மராத்தியர் அரண்மனை முழுக்க அருங்காட்சியகமாக உள்ளது. நான் முதன் முதலில் சென்ற போது, இராஜராஜனுக்கு என்று தனி அருங்காட்சியகம் இல்லை. எல்லாம் ஒன்றாகவே இருந்தது.

அந்தக் கூடத்தில் பெரிய அளவில் இருந்த பிச்சாடனர் சிலையும், அவர்களின் சோழர்காலச் சிலைகளும் அவ்வளவு அழகு. பார்த்துக்கொண்டே இருக்கலாம் போல அழகு. அத்துனை மாடிகளும் ஏறி, மராத்தியர் காலக் கலைச் சேகரிப்புகள், அவர்களின் அரச சபை , தனி சேகரிப்புகள் , புத்தகங்கள் என நீண்டு கொண்டே போனது நான் பார்த்த விசயங்கள்.



இராஜராஜனை அடுத்து, நமக்கு எப்போதுமே இராசேந்திரன் தானே , கங்கை கொண்ட சோழபுரத்து அருங்காட்சியகம், கங்கை கொண்ட சோழபுரதிற்கு அகழ்வைப்பகமாக இருந்தது. அங்கு கிடைத்த தொல்லியல் எச்சங்கள், சிலைகள் என ஒரு சிறிய இடம் என்றாலும் நம் தேடல்களுக்கு மிகுந்த தீனி தரும் இடம் அது.

காஞ்சிபுரத்தில் அருங்காட்சியகமா? இது எனக்கு கிடைத்த முதல் கேள்வி. காஞ்சியைச் சொந்த ஊராகக் கொண்ட மக்கள் பலரை நானும் விசாரித்தேன். கடைசியில் அருங்காட்சியகம் இல்லை, என்றே நானும் முடிவு செய்துவிட்டேன். அப்போதெல்லாம் இணையம் அவ்வளவு எளிதில் பயன்படுத்தக்கூடியதாக இல்லை. ஆனாலும் காஞ்சிக்கு வேறு இரண்டு அருங்காட்சியகங்களைப் பார்க்க வேண்டும் எனக் கிளம்பி சென்றேன். அவை இரண்டும் தனிச் சேகரிப்புகள் , காஞ்சிக் குடில் மற்றும் சகுந்தலா தேவி அருங்காட்சியகம், காஞ்சியில் ஒரு ஆட்டோ பிடித்து இங்கெல்லாம் செல்ல வேண்டும் என்று பேசிவிட்டு, முதலில் காஞ்சிக் குடிலுக்குச் சென்றோம். ஆஹா, என்ன அருமையான இடம், ஒரு குடும்பம் தங்களின் மூதாதையர்களின் நினைவாக அவர்களின் பொருட்களை அப்படியே பாதுகாத்து வைத்துள்ளனர். அவர்களின் கூடம், திண்ணை, சமையலறை எல்லாம் அப்படியே அந்தந்தப் பொருட்களுடன் இருந்தது. அவர்களின் சமையலறை என்னைப் பெரிதும் ஈர்த்தது. இரண்டு தலைகளைக் கொண்ட அரிவாள்மனை, இரும்புக் கரண்டிகள், இரண்டு அடுப்பு, இரும்பில் இடிக்கும் சிறிய உரல்கள் என்று மிக அழகான சேகரிப்பு அது.

சகுந்தலா தேவி அருங்காட்சியகம், ஏகாம்பரேஸ்வரர் கோவிலின் அருகே இருந்தது. அது ஒரு கல்யாண வீட்டின் நிகழ்வுகளைப் பதிவு செய்திருந்தது நான் சென்ற போது. வீட்டின் ஆட்களைக் கூட பொம்மைகளாக செய்து வைத்திருந்தனர். அங்கு நான் ஒரு கட்டிடக்கலை மாணவியாக வியந்த விஷயம், அவர்களின் மாடியில் இருந்த பெண்களுக்கான தனி அறை.




அப்படியான ஒரு அமைப்பை நான் இசுலாமியக் கட்டிடக்கலையில் பார்த்திருக்கிறேன், நம் ஊரிலும் அப்படியான பழக்கங்கள் இருந்தது என்பது எனக்கு மிகுந்த ஆச்சர்யத்தைத் தந்தது. அந்த அறை ஆபரணங்கள், அவர்களின் ஆடைகள் போன்ற பொருட்களால் நிறைந்திருந்தது.



எல்லாம் பார்த்த பிறகு நான் வந்த ஆட்டோ அண்ணா, இதே போல அரசு ஏதோ வைத்திருக்கிறதே, அது

பார்க்க வேண்டாமா என்று கேட்டாரே.. நான் என்ன சொல்வதென்று தெரியாமல் இருந்தேன். அழைத்து போங்கள் அண்ணா என்று கூறிவிட்டு, பயணத்தைத் தொடர்ந்தோம். அரசு அருங்காட்சியகம் , காஞ்சிபுரம், கட்டிடத்தின் முன்பு நிறுத்தினர். சிறிய கட்டிடம் தான் , ஆனால் நான் பார்க்க நினைத்த நிறைய விசயங்கள் அங்கே இருந்தது. மகர யாழின் சிறிய மாதிரியை செய்து வைத்திருந்தார்கள். நிறைய சிலைகள், காசுகள், பொது சேகரிப்புகள் என்று பல அரிய தகவல்களைக் கொண்டிருந்தது.



அடுத்து நான் சென்றது மதுரை மாநகர அருங்காட்சியகம். மதுரையில் காந்தி அருங்காட்சியகம் பெரிதாகவும், அரசு அருங்காட்சியகம் அளவில் கொஞ்சம் சிறியதாகவும் உள்ளது. ஆனால் கட்டிடத்தின் வெளியிலேயே பல சிற்பங்கள், கல்வெட்டுப் பகுதிகள் எல்லாம் இறைந்து கிடந்தது. உள்ளே ஒரு சிறிய அளவு சேகரிப்புகளே இருந்தன.



அடுத்து நான் அதிகமாகத் தேடியது திருச்சி அருங்காட்சியகம். மங்கம்மாள் சத்திரம், என்று உள்ளூரில் அழைப்பார்கள் போலும், நானும் உச்சி பிள்ளையார் கோவிலின் வீதியில் பலரிடம் அருங்காட்சியகம் பற்றி விசாரித்து கிடைக்காது போய் முதல் முறை திரும்பிவிட்டேன். இரண்டாம் முறை சரியாக இடம் விசாரித்துக்கொண்டு சென்று அந்த அழகிய அருங்காட்சியகத்தைப் பார்த்தேன். வெளியிலேயே சிம்ம தூண் சிற்பங்கள், ஜேஷ்டா தேவி சிற்பங்கள், வீரக்கல், அகழ்வாராய்ச்சி பற்றிய புகைப்படங்கள், திருச்சி மாநகரின் வரலாற்று இடங்களின் புகைப்படங்கள் என வரலாற்றுப் பொக்கிஷமாகவே இருந்தது.

மல்லை செல்லும் போதெல்லாம், அந்த அருங்காட்சியகத்தின் சிற்பங்களைப் பார்க்க அதிகம் பிடிக்கும். அது சிற்பக் கலை கல்லூ ரியின் வேலைப்பாடுகளும் வைக்கப் பயன்படுத்தும் படியால், அங்கு இருக்கும் சிறிய கடற்கரைக் கோவில் மாதிரி, ஓவியங்கள், சுதைச் சிற்பங்கள் என அனைத்தும் நம்மை கவரும் வகையில் இருக்கும்.



வேலூர் சிறிய வயது முதலே சென்று வந்த ஊர். அங்கு உள்ள அருங்காட்சியகத்திற்க்கு சிறிய வயதிலேயே அழைத்து போயிருக்கிறார்கள். ஆனால் ஏதும் கூர்ந்து பார்த்ததில்லை, அல்லது நினைவில் இல்லை. அதனால் மீண்டும் சென்றேன். அங்கு ஆற்காடு நவாபுகள், ஆங்கிலேயர்கள், சில சோழ , பல்லவ சேகரிப்புகள் உள்ளன. ஆனால் மிக பெரிய கூடங்களில் அழகிய விளக்குகள் வைத்து, சேகரிப்புகளை காண்பிக்கிறார்கள்.

அதன் பிறகு முதுகலையில் மீண்டும் புதுக்கோட்டை மாவட்டமே ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்டதால் பெரிதாய் அருங்காட்சியகங்கள் பார்க்கவில்லை. திருமணத்திற்குப் பிறகு தர்மபுரி நடுகல் அருங்காட்சியகம் சென்றோம். ஊரில் உள்ள பல நடுகற்கள் அங்குதான் உள்ளது. அதைத் தவிர அங்கு சுடுமண்ணில் செய்தக் குளியல் தொட்டியின் வடிவத்தில் உள்ள இமைதாழி ஒன்று அருமையாக இருந்தது.

என்னை மிகவும் ஈர்த்தது, நாங்கள் அங்கு பார்த்த "மரத்தாலான ராவணன் சிலை". அந்தச் சிலைக்கு பத்துத் தலைகளும், இருபது கைகளும்



கொண்டு, மிக பிரம்மாண்டமாக இருந்தது. அது மரத்தால் செய்யப்பட்டு, அதன் மேல் தோல் கொண்டு மூடப்பட்டிருந்தது. மிக அருமையான வேலைப்பாடுகள் கொண்ட ஒரு சிற்பம் அது.

கடந்த வருடம் ஜெய்பூர் அரண்மனை, அரசு அருங்காட்சியகம், ஜம்மு அரசு அருங்காட்சியகம், ஹம்பி அரசு அருங்காட்சியகம், பாதாமியில் ஒவ்வொரு வரலாற்று சிறப்பு மிக்க இடத்திலும் ஒரு அருங்காட்சியகம் இருந்தது, பாதாமிக் குடைவரைகள் அருகில் ஒன்று , ஐஹோலேவில் ஒன்று, பட்டடக்கல்லில் ஒன்று என்று அங்கு கிடைத்த சிலைகள், கல்வெட்டு பகுதிகள் போன்றவை வைக்கப்பட்டுள்ளன.

நாம் அனைவரும் பார்த்து ரசித்து வரலாற்றுத் தகவல்களை அறிந்துக்கொள்ளவே அருங்காட்சியகங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவை எல்லாம் யாரும் கேட்பாரற்றுக் கிடந்ததாலேயே பல நாடுகளுக்கும் எடுத்துச் செல்லப்பட்டு, அங்கேயாவது பத்திரமாக இருக்கட்டும் என்று ஒரு மனநிலைக்கு நாம் இன்று வந்திருக்கிறோமே, அந்த மன நிலையே தவறு. நாமும் அறிந்து கொண்டு, நம் அடுத்தத் தலைமுறைக்கும் இந்தச் செய்திகளை எடுத்துச் செல்லவேண்டும்.

இச்சிலைகளிலும், கல்வெட்டுத் துண்டுகளிலும், உடைந்த சில்லுகளிலும் நம் வரலாறு இன்னும் வாழ்ந்துக் கொண்டிருக்கின்றது. அதை பாதுகாத்து போற்ற வேண்டியது நம் கடமை.



கட்டுரையாளர்
Architect. வித்யா லட்சுமி
துணைப் பேராசிரியர்

# புத்தக அறிமுகம்




புத்தக அறிமுகம் - சுஜாதாவின் "நிலா நிழல்"

"புத்தகங்கள் சிறந்த நண்பர்கள்" - என்று அனுபவிக்காமலா நம் பெரியோர்களும், முன்னோர்களும் கூறியுள்ளனர்? நினைத்தாலே பெருமை தரும் உண்மை! நூல்களைத் தங்கள் வாழ்வின் ஓர் இணைபிரியா அங்கமாகக் கொண்டோர்க்குத்தான் இவ்வுணர்வு எழும்.

மனிதர்கள் ஒவ்வொருவரும், ஒரு திறந்த புத்தகம். பல்வேறு உணர்ச்சிகள், எண்ணங்கள், செயல்முறைகள், தோற்றங்கள் என ஒவ்வொருவரையும் படித்தால் புரிந்துகொள்ள ஏராளம் உள்ளன. வாழ்க்கையின் அரிய பல பொக்கிஷங்களைத் தன்னுள்ளே அடக்கித், தன்னைப் படிப்பவரிடம் கஞ்சத்தனம் இல்லாமல் அவற்றை வாரிவழங்குபவை நூல்கள் மட்டுமே!

எந்த ஒரு வளர்ந்து வரும் நாகரிகத்திற்கும் அடிப்படை அவர் போற்றிப் பாதுகாத்த மரபே. காலங்காலமாக அறிவை மேம்படுத்தப் பயன்பட்ட புத்தக வாசிப்பு, இன்றைய நவீன யுகத்தில் மெல்லத் தேய்ந்து அழிகிறது என்றுதான் கூற முடியும். அத்தகைய மரபை மீட்டெடுக்கும் நோக்கத்தில், எங்கள் மரபுசார் இதழில் புத்தக அறிமுகங்கள் எனும் இப்பகுதியின் நோக்கம், தமிழ் கூறும் நல்லுலகிடையே நல்ல புத்தகங்களை வாசித்து நேசிக்கும் பழக்கத்தை வளர்க்க, அதன் அறிமுகங்களைத் தந்து விழிப்புணர்வு ஏற்படுத்தவே!!

சிறந்த எழுத்தாளர்கள், வரலாற்று ஆசிரியர்கள், நாவலாசிரியர்கள் எனத் தேர்ந்து, அவர்தம் பலதரப்பட்ட கதைக்களங்களைப் படித்து, முடிந்தவரையில் மிகவும் பிரபலமடையாத ஆனால் போற்றத்தக்க புத்தகங்கள், சிறுகதைகள் அல்லது நாவல்களின் ஆய்வுகளை இப்பகுதியில் நீங்கள் காணலாம்.

இவை தனிப்பட்ட மனிதரின் கருத்துகளிலிருந்து அப்பாற்பட்டு இருக்க வேண்டும் என்பதை நினைவில் கொண்டு, எங்களால் இயன்றவரை கதைக்கருவைக் கூறி முழு கதையையும் படிக்கும் ஆர்வத்தைத் தூண்ட எத்தனித்துப், பெரும் சமுத்திரத்தின் சிறு துளியாகத் தொடங்குகிறோம்!!

நிலா நிழல்

நிலா நிழல் நாவலுலக, திரையுலக,
அறிவியலுலக மேதைகளுள் ஒரு சிறந்த எழுத்தாளரான சுஜாதாவின் படைப்பு. சுஜாதாவின் எத்தனையாவது சிறுகதையோ, எப்போது இயற்றினாரோ அறியேன்! ஆனால் அவரிடம் இருந்த பரந்த உலக அறிவுக்கு ஓர் நல்ல எடுத்துக்காட்டு.

சிறுகதை ஆசிரியர்கள் கற்றுக்கொள்ள வேண்டிய திறன் - படிப்பவரிடம் கதையின் முடிவை விட்டுவிடுவது, எதார்த்தங்களிலிருந்து கதையையும் கதாபாத்திரத்தையும் தேர்வு செய்வது!! இவற்றை வலியுறுத்தும் ஒரு படைப்பு நிலா நிழல்.

தான் வாழ்ந்த திருச்சி ஸ்ரீரங்கத்தில் கதையைத் தொடங்கும் ஆசிரியர், அங்கே பள்ளி முடித்துக், கல்லூரி செல்லும் வாலிபன் முகுந்தன் - தன் கனவான கிரிக்கெட்டு விளையாட்டில் சிறப்பதை, தன் பெற்றோர், அண்ணன் ஆகியோரை எதிர்த்து அதை நிறைவேற்றுவதை, அதற்குத் துணை செய்யும் சிற்றப்பா பெண், ஜெயந்தி, கல்லூரித் தோழர்கள், பேராசிரியர்கள், தாளாளர் ஆகியோர் - என அருமையான பாத்திரங்களின் மூலம் பயணிக்கிறார்.

ஸ்ரீரங்கத்துத் தெருக்களை அழகாக அலசும் சுஜாதா, உடனே முகுந்தன் பல்கலைக்கழக மட்டைப்பந்து அணியில் தேர்வாகி, பம்பாய் செல்ல, பம்பாயின் சூழலையும் கலாச்சாரத்தையும் படம்பிடித்துக் காட்டுகிறார். இதில் சுட்டிக்காட்டப்படும் சமூக சீர்கேடுகள், அவலங்கள், வாழ்க்கைமுறை வித்தியாசங்கள், மேல்நாட்டுப் பழக்கவழக்க மோகம், ஏழை பணக்காரர் இடையே என்றும் நிலவும் ஏற்றத்தாழ்வுகள் எனக் கதைக்குத் துணை சேர்க்கும் நிகழ்வுகளாக அடுக்குகிறார்.

ஒரு பக்கம் பம்பாய்க்கே உரிய குணாதிசியத்துடன் தோழியா? காதலியா? கிராதகியா? மோகினியா? என்று வியக்கக்கூடிய லல்லி எனும் கதாநாயகி, அவளால் ஏற்படும் காதல் தொல்லைகள், அதை மறக்காமலும் மறுக்காமலும் நாயகன் திண்டாடுவது. மறு பக்கம் என்றும் நடுநிலைமையுடன் ஆறுதல் அளித்து தாங்கும் ஜெயந்தி என பாசப் பிணைப்புகள் பல.

கதையில் சுஜாதாவின் ஆழ்ந்த கிரிக்கெட்டு ரசிக ஆற்றல் வெளிப்படுகிறது என்று கொள்ளலாமா? அல்லது அவர் அந்நாளில் இந்தியர்களின் உயிர் துடிப்பான கிரிக்கெட்டைத் தன் கதையின் சாவியாக கொண்டாரா? அல்லது ஒரு கிரிக்கெட் வருணனையாளரின் முழு ஆற்றலையும் பெற்றவரா? இதைக் கதையைப் படித்தால் நீங்களே உணர்வீர்கள்!!

எழுத்துக்களை எளிதில் படமாக்கிவிடலாம் போன்ற திரைக்கதை ஓட்டம். எதார்த்தத்தை இதற்கு மேல் விளக்கமாக கூறமுடியாது போன்ற கட்டங்கள்.

இளமைக்கே உரிய மோகம், ஆசை எழ, அதைக் காதலா? இச்சையா? என்று குழம்பும் கதாநாயகன், நடுநடுவே தன் இலட்சியம் தன்னை அழைப்பது எனக் கதையினூடே விறுவிறுப்புக்கும், எதிர்பார்த்த, எதிர்பாரா முடிவிற்கும் பஞ்சமில்லை!! தோல்விகள், ஏமாற்றங்கள், புறக்கணிப்புகள் - என விரக்தியின் இறுதிக்குச் சென்று தன் கனவுக் கைத்தாங்கலால் மீள்கிறானா? வீழ்கிறானா? முகுந்தன், அவனது காதல் வென்றதா? இச்சை வென்றதா? - இக்கேள்விகளே கதையின் முடிவை நோக்கி நம்மை நகர்த்துகின்றன!!

நிலா நிழல் - சற்றே யோசித்துத் தலைப்பைக் கதையுடன் பொறுத்துகிறேன், நிழல் போன்ற களங்கங்கள் மறைய மறைய கண்கொள்ளாப் பேரொளி! களங்கம் என்று ஒதுக்க முடியாதன ஆனால் குறைக்க இயலுமல்லவா? அது போல், ஏற்றத்தாழ்வும் வெற்றித் தோல்வியும் உள்ள வாழ்வில் அனுதினமும் தேய்ந்து பொலிகின்ற மனித மனங்கள் - "நிலா நிழல்"கள்.

மொத்தத்தில் தனி மனிதன் ஒருவனின்,
நறுமணமான ரோஜா இதழ்கள் நிறைந்த
இலட்சியப் பாதையில், ஆசையும் மோகமும் மறைந்திருக்கும் முட்கள், இதழ்களை நுகர நினைத்தால் முட்களால் ரணப்பட்டுப் பண்பட வேண்டும். இதை இதயத்தில் ஆணியடித்தால் போல் அறைகிறார் சுஜாதா. படிக்க வேண்டிய சிறுகதை!!

அடுத்த இதழில் மற்றுமொரு ஆசிரியர் கோணங்களை, வேறொரு சமுதாய அல்லது வரலாற்று நாவலோ சிறுகதையின் மூலமோ ஆய்வோம்.

-சரண்யா பத்ரி



# நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் சாத்தன் !

## - தனசேகர் பிரபாகரன்

தமிழகத்தின் இலக்கிய வரலாற்றில் முக்கிய இடம் வகிப்பவை பக்தி இலக்கியங்கள். சுமார் கி.பி ஆறாம் நூற்றாண்டு தொடங்கி முன்னூறு ஆண்டுகள் தமிழகம் பக்தி இலக்கியங்களால் திளைத்தது எனலாம், திருமாலை முழுமுதற் கடவுளாய்க் கொண்ட வைணவ நெறி செழிக்கப் பன்னிரு ஆழ்வார்கள் தோன்றிப் பூந்தமிழ்ப் பாயிரங்கள் செய்தனர். குல வேறுபாடுகள் இன்றி ஆண் பெண் பேதமின்றிச் செழித்தது வைணவ நெறி, விளைவு நாலாயிர திவ்ய பிரபந்தம் !

முன்னமே கண்டது போல திருமாலை முழுமுதற் கடவுளாய்ப் போற்றுவது வைணவம், நாலாயிர திவ்ய பிரபந்தம் முழுவதும் திருமால் பெருமைதான், ஆனால் ஆங்காங்கே சில குறிப்புகள் சுவாரஸ்யமாக நமக்குக் கிடைக்கின்றன, ஆழ்வார்களில் கடையானவரும் ஆயிரம் பாடல்களுக்கு மேல் பாடியவரும் திருமங்கை மன்னன் ஆவார். அடியார்ச் சீயமென்றும் அரட்டமுக்கி என்றும் அன்பர்களால் விளிக்கப்பெறுபவர். இவர் பாடல்கள் மூலம் இவர் தமிழ் இலக்கிய இலக்கணங்களை நன்கு பயின்றவர் என்பது புலனாகிறது.

இவர் பாடிய சிறிய திருமடல் எனும் நூலில் சாத்தனைப் பற்றிய குறிப்பொன்று வருகிறது, மிக அரிதான இடமாகவே இதனை நாம் பார்க்க வேண்டியிருக்கிறது. சாத்தன் என்றும் அய்யனார் என்றும் அழைக்கப்படும், இவரைப் பற்றி நிறையவே ஆராய வேண்டியிருக்கிறது. சாஸ்தா என்ற வடமொழிப் பெயர் சாத்தன் என்று தமிழில் வழங்குவதாக கூறுவர்.



எளியோரின் தெய்வமாக ஒரு கையில் செண்டுடன் ஒருகாலை மடித்து ஒருகாலைத் தொங்கவிட்டு ஒரு கையைக் கால் மீது வைத்து யோகபட்டயம் அணிந்து ஆனை வாகனத்துடன் இருமனைவியரோடோ தனியாகவோ காணப்படுவார் ! ஊரின் காவல் தெய்வமாதலின் எல்லையில் பெரும்பாலும் கோவில்கள் இருக்கும். சிலப்பதிகாரம் புகார் நகரத்துக் கோட்டங்களை வரிசைப்படுத்தும்போது அய்யனார் அல்லது சாத்தன் கோவிலைப் புறம்பணையான் கோட்டம் என்கிறது அதாவது ஊருக்கு வெளியே வாழும் தெய்வம் என்றபொருள்படும்படி, சாத்தன் என்ற பெயர் தமிழகத்தில் சங்ககாலம் முதலே இருந்துவருகிறது, இதனை புத்தரின் ஒரு பெயர் என்று கூறுவர், சாஸ்தா என்பது பொதுப்பெயராகவே பார்க்கப்படுகிறது. தமிழகத்தில் சாஸ்தா.'.சாத்தன் எனும் பெயர்கள் அய்யனாரையே மிகுதியாகக் குறிக்கப் பயன்படுகின்றன. இந்தச் சாத்தனான அய்யனார் வழிபாடு வடதமிழகம், காவிரி டெல்டா, தென்தமிழகம், மலையாளத்தேசம் என்று எல்லாவிடங்களிலும் காணப்படுவது ஒப்புநோக்கத்தக்கது.

சரி நம் பகுதிக்கு வருவோம் மடலூர்தல் என்பது ஒரு சங்ககால வழக்கம். தலைவன் தான் விரும்பிய தலைவியை அடைவதற்காக மடலூர்தல் வழக்கம். காதலில் தோல்வியுற்ற சங்ககாலத் தலைவன், ஊரார் தன் காதலை உணரும் பொருட்டு மேனியில் சாம்பலைப் பூசிக் கொண்டு யாரும் சூடாத எருக்கு போன்ற மலர்களைச் சூடிக் கொண்டு பனைமரத்தின் அகன்ற மடல்களால் செய்யப்பட்ட குதிரை ஒன்றில் ஊர்ந்து காண்போர் கேட்கும் வண்ணம் தலைவியின் பெயரைக் கூவிக்கொண்டு செல்தல் ஆகும்.

பொதுவாக பெண்கள் மடலூர்தல் இல்லை ஆனால் இந்த வழக்கத்தை மாற்றிப் பெண் மடலூர்வேன் என்று சொல்வதாய்ப் பக்திபூர்வமாகத் திருமங்கை ஆழ்வார் செய்த இலக்கியம் பெரிய மற்றும் சிறிய திருமடல்கள்.

இதில் சிறியதிருமடலில் தலைவி திருமாலையே நினைந்து பித்துப் பிடித்தவள் போல் இருக்கிறாள். இதனால் கவலை கொண்ட தாய் இவளுக்கு என்ன நேர்ந்ததோ என்று பயந்து அடியவர்களின் கால் மண்ணை எடுத்து இட்டுப்பார்க்கிறாள் ஆனாலும் மாறவில்லை, பின்னர் இதுவரை அவள் செய்தறியாத காரியமாக செங்குறிஞ்சி மாலையைச் சார்த்திக் கொண்டிருக்கும் சாத்தனுக்கு நேர்ச்சை ஒன்றும் நேர்ந்து பார்த்தாள் என்ற குறிப்பு வருகிறது. இதற்கு உரையெழுதிய வைணவ ஆசிரியர்கள் ஆசிரியர்கள் வைணவ குலத்தில் பிறந்து மற்ற தெய்வங்களை வணங்கி அறியாதவள் முதல் முறையாகத் திருத்துழாய் பரிமாறப்படாத தெய்வாமான சாத்தனைக் கும்பிட்டுப் பார்த்தாள் அப்போதும் அவளின் மகளுக்குச் சுகமாகவில்லை என்று விளக்கம் தருகின்றனர். இப்படிப் பித்துபிடித்தவர்போல் இருப்போருக்குச் சாத்தனை வேண்டிக்கொண்டால் சுகமாகும் என்பது அக்கால நம்பிக்கை போலும்.

சாத்தன் மற்றும் அய்யனார் வழிபாடு குறித்துப் பலவிடயங்கள் நாம் அறியவேண்டியிருக்கிறது. இருப்பினும் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் வரும் இந்தச் சாத்தனின் குறிப்பு கண்டிப்பாக முக்கியமானதும் அரிதான ஒன்றாகும் என்பதில் யாதொரு ஐயமும் இல்லை.

**"சீரார் செழும்புழுதிக்காப்பிட்டு செங்குறிஞ்சி**
**தாரார் நெளமாலை சாதர்க்கு தான்பின்னும்**
**நேராதன ஒன்னுனேர்ந்தான் அதனாலும்**
**தீராதெஞ் சிந்தைநோய்"**

# கால நதி

## ஆதித்தியவர்ஷினி

”இன்றைய நடப்பு, நாளைய சரித்திரம்”. பூமியில் உயிரினங்கள் உருவாக ஆரம்பித்தபோதே வரலாறும் ஆரம்பித்துவிட்டது. வரலாற்றைக் கணிக்க முடிகிறதே தவிர “இதுதான் உண்மை“ என்று சான்றுகள் இல்லாமல் எவரும் வரலாற்றைப் புனைவது சாத்தியம் இல்லை. சான்றுகள் இல்லாமல் போனால் நம் வரலாறும் இல்லாமல் போகும்.

காலக் கணக்கில், வரலாற்றுக்கு முந்தைய காலம் மற்றும் வரலாற்றுக் காலம் என்று இருபிரிவுகளாய்ப் பாகுபாடு செய்யபடுகிறது. பழைய கற்காலம், நுண்கற்காலம், புதிய கற்காலம், பெருங்கற்காலம் என வரலாற்றுக் காலம் வகுக்கப்படுகிறது. இந்தப் பிரிவுகள் அனைத்தும் மனித வாழ்க்கைமுறையைப் பொறுத்து வகைபடுத்தப்பட்டவை. மனிதன் விலங்கோடு விலங்காய்த் திரிந்தபோது தனது ஆறாம் அறிவைப் பயன்படுத்தத் தொடங்கினான், இதுவே மிருகத்திற்கும் மனிதனுக்கும் பெரும் வேறுபாடாய் அமைந்தது, மனிதனைப் பெரும் சக்திவாய்ந்தவனாக வளரச் செய்தது. மனிதனின் பெரும் கண்டுபிடிப்பு என்று கூறப்படுவது “நெருப்பு“, அதன் பின் வேட்டையாட பயன்படுத்திய கற்காலக் கருவிகள். படிப்படியாக மனித நாகரிகம் வளர்ந்தது. மிருகமாய் காடுகளில் திரிந்ததுமுதல் இன்று மிருகமாக நாகரிக நகரத்தில் வாழ்வதுவரை அனைத்தும் வரலாற்றில் பதிவாகி வருகிறது. இதில் வருத்தம் தருவது, அறிந்தும் அறியாமலும் நம் வரலாற்றை நாமே மதிக்காமல் அழித்து வருவதே.

வரலாற்றைப் படிக்கவும், ஆராயவும், காக்கவும், அழிக்கவும் (மாற்றவும்) நம்மால் மட்டுமே முடியும்.

நாகரிக வளர்ச்சி

கற்கால மனிதனின் வரலாறு எழுத்து வடிவில் கிடைக்கப்பெறவில்லை, அப்போது எழுத்து வடிவம் தோன்றாத காலம், எனவே அவர்கள் வேட்டையாடப் பயன்படுத்திய பொருள்கள், பாறை ஓவியங்கள் போன்றவை வரலாற்றுச் சான்றுகளாக அமைகின்றன. ஆயுதங்கள் செய்யப் பயன்படுத்திய பொருள்களைக்கொண்டு காலங்கள் குறிப்பிடபடுகின்றன. கற்களைக்கொண்டு ஆயுதம் செய்து வேட்டையாடி மனிதன் வாழ்ந்த காலம் எனில் இக்காலத்தைக் கற்காலம் என குறிப்பிடுகின்றோம், இது சுமார் 15000-20000 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலம். கல்லாயுதத்தைத் தொடர்ந்து மண் பாண்டங்கள் உலோகங்கள் எனப் பொருட்களின் பயன்பாட்டில் வளர்ச்சி தொடங்கியது.

ஓவியங்களைத் தொடர்ந்து வளமைச் சின்னங்களும் எழுத்துக்களும் வடிவம் பெற ஆரம்பித்தன. வேட்டையாடியும், உணவு பொருட்களைத் தேடியும் மனிதன் வாழ்ந்த காலத்திற்குப் பின்னர் புதிய கற்காலத்தில் காடுகளில் வாழ்ந்த உயிரினங்களைத் தன் தேவைக்குப் பழக்கி அதனால் கிடைக்கும் பலன்கொண்டு வாழ ஆரம்பித்தான். அதிலிருந்து முன்னேறிப் பயிரிடத் தொடங்கினான், உழவு தொழில் அப்போதே ஆரம்பமானது. இந்த வளர்ச்சியின் அடிப்படையில் கூட்டமாக சேர்ந்து வாழவும் பழக ஆரம்பித்தான் மனிதன்.

நாகரிக வளர்க்கு இயற்கை நிலவமைப்பு பெரும் காரணமாகிறது. ஐந்துவகை நிலவமைப்பு அனைவரும் அறிந்ததே! இந்த நிலவமைப்பு எவ்வாறு மனித வளர்ச்சிக்குக் காரணமாகிறது என்பது நம் பள்ளிக் கல்வி கற்றுக்கொடுத்தது இல்லை. ஐவகை நிலங்களிலும் தனித்துவமாக வாழ்ந்தபோது மொழி வளர்ச்சி ஆர்மபித்தது, பலருடன் கூடி வாழ்ந்து கருத்துக்கள் பரிமாற மொழி அடிப்படை தேவை ஆனது. ஐவகை நிலங்களிலும் தொழில் வளர்ச்சி மற்றும் இடம் பெயர்தலால் நாகரிகமும் பழக்க வழக்கமும் பரவ ஆரம்பித்தது.

மொழி வளர்ச்சி

பேச்சுமொழிக்குப் பின்னரே எழுத்துமொழி தோன்றியது. சொற்களை ஒலித்து அதற்கான ஓவியங்களை வரைந்தனர், இந்த ஓவியங்கள் நாளடைவில் எழுத்துக்களாக மாறத் தொடங்கின. வழக்கில் இருக்கும் பழைய மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்று என்பதற்கு சான்று தொல்காப்பியமும் இலக்கிய நூல்களாலேயாகும். வட்டெழுத்தின் திருத்திய வடிவமே தமிழ் எழுத்துகள். வட்டெழுத்துகள் அசோக சக்ரவத்தி

காலத்து பிராமி எழுத்துகளிருந்து வந்தவை என்ற கருத்து பரவியுள்ளது. தொல்காப்பியத்தின் சூத்திரங்கள்படி வட்டெழுத்துக்கள் பிராமியிலிருந்து பிறந்தவை அல்ல என்பது தெளிவாகிறது.

வரலாற்றுக் காலம்

நாகரிக வளர்ச்சியும் மொழி வளர்ச்சியும் அடைந்தபின் மக்கள் குழுக்களாக வாழத் தொடங்கி அதற்கு ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்து, அரசர்களால் ஆளப்பட்டு வந்தனர். பிற நில மக்களுடன் தொடர்புகொண்டு வாணிகம் மேற்கொண்டனர். தொடக்க காலத்திலிருந்தே இறையுணர்வு கொண்டு வாழ்ந்த மனிதன், வரலாற்றுக் காலத்தில் பல வழிபாட்டுமுறையைப் பின்பற்றினர். அதன் அடிப்படையில் பல சமயங்களும், பழக்க வழக்கங்களும், பண்பாடும் வளர்ச்சி அடைய தொடங்கின. கலைகளின் வளர்ச்சி வரலாற்றுக் காலத்தில் உச்சத்தில் இருந்தது. கலைகள் அனைத்தும் ஒன்றோடு ஒன்று சார்ந்ததாகவே இருந்தன. இறைவழிபாட்டால் கோவில்கள் எழுப்பப்பட்டுக் கட்டிடக் கலை வளர்ச்சி பெற்றது, அதைச் சார்ந்து சிற்பக்கலை பின் ஓவியக்கலை என எண்ணிலடங்காத கலைகள் வளர்ந்தன.

தற்காலம்

பல்லாயிரம் ஆண்டுகள் வளர்ச்சிக்குப் பின், இன்றும் வளர்ச்சியை நோக்கிப் பயணப்பட்டு வரும் மனித இனம் இன்று வளர்ச்சியின் உச்சம் தொட்டுதான் இருக்கிறது, சில நேரங்களில் ஆச்சர்யத்தில் ஆழவும் வைக்கிறது. இன்றைய காலக்கட்டத்தில் அனைத்தும் தானியங்கி மயமாகிறது. நேரத்தைச் செலவு செய்ய விரும்பாத உலகமாக வளர்ந்து வருகிறது.

மாற்றங்கள் அனைத்தும் வரவேற்கத் தக்கவைதானா? பெரும் கேள்வி எழத்தான் செய்கிறது. பல்லாயிரம் ஆண்டுகள் வளர்ச்சியில் மாறாத இயற்கை தற்காலத்தில் மாறியது ஏன்? ஆறுகள், ஓடைகள், ஊற்றுகள், குளங்கள், குட்டைகள் எங்கே சென்றன? விஷம் பாய்ந்து நுரைதள்ளி மனிதன் இறந்ததாகக் கேள்விப்பட்டிருப்போம், இன்று ஆறுகள் ரசாயன விஷம் பாய்ந்து நுரைதள்ளிக்கொண்டுதா இருக்கிறன. இவை அனைத்தும் வளர்ச்சியின் உச்ச வெளிப்பாடுகள், வளர்ச்சியின் நன்மைகளைப் பார்த்த நாம் அதன் தீமைகளை மறந்து போனதே வருத்தம்.

தகவல் தொழில்நுட்ப வளர்ச்சியில் நம் மரபை வரலாற்றைப் பண்பாட்டை வாழ்க்கைமுறையை மருத்துவமுறையை இன்னும் பலவற்றை எவ்வாறு காக்கப்போகிறோம்? துரிதம் தேடி அலையும்பொருட்டு, புதியனவற்றின் நன்மைத் தீமைகளை அறிந்து செயல்பட வேண்டியது முக்கியமாகிறது. நாம் இன்று செய்யும் செயல்கள் நாளைய வரலாறு. சேர்க்கும் தகவல்கள் உண்மையானதாகவும் தரமானதாகவும் இருக்கவேண்டியது அவசியம். வரலாற்றின் உண்மையான பக்கங்கள், அழியும் தருவாயில் இருக்கும் செய்திகளை, இன்றைய தகவல் தொழில்நுட்ப வளர்ச்சியால் காக்க முயற்சிப்போம்.



# கவிதை இலக்கணம் கற்போம்

## கவிஞர். வெண்கொற்றன்

## நுழைவாயில்

கவிதை என்றால் என்ன?

இது கொஞ்சம் சிக்கலான கேள்வி! ஒவ்வொருவரும் ஒரு விடை சொல்லலாம், எல்லாமே சரிதான்! அதுதான் கவிதை!

ஆனால், கவிதை அமைப்பிற்கான இலக்கணம் என்று ஒன்று உள்ளது, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே தெளிவாக வரையறுக்கப்பட்டுவிட்டது! இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக பல வளர்ச்சியும் பரிணாமும் கண்டுவிட்டது. இதுதான் தமிழின் ”யாப்பிலக்கணம்”.

இதைக் கற்பதனால் என்ன பயன்?

அது உங்களைப் பொறுத்தது!
கவிதை எழுதலாம்: வெண்பா, விருத்தம்,
ஏற்கனவே எழுதப்பட்ட கவிதைகளை மேலும் நுட்பமாய் ஆழமாய் இரசிக்கலாம்.
மொழி ஆளுமையை வளர்த்துக் கொள்ளலாம்.
எதுவானாலும், புதிதாய் ஒன்றைக் கற்பது நல்ல விஷயம்தானே?

பொதுவாகத் தமிழ் இலக்கணம் பற்றிய ஒரு குட்டி அறிமுகத்தோடு தொடங்குவோமா?

தமிழ் இலக்கணம் தொல்காப்பியத்தில் இருந்து ஆரம்பமாகிறது (நமக்குக் கிடைத்தவரையில் இதுதான் பழைய நூல்!) தொல்காப்பியர் ”எழுத்து” ”சொல்” ”பொருள்” என்று மூன்று நிலையில் இலக்கணத்தை அலசுகிறார்.

”எழுத்து” என்பது மொழியின் ”ஒலிகள்”. உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம் இப்படி இவற்றின் தன்மை, கால அளவு, உச்சரிப்பு, எது எது எந்தெந்தக் கூட்டணியில் வரும், எப்படிப் புணரும் இதைப் பற்றியெல்லாம் அலசுவது ”எழுத்திலக்கணம்”. (கிட்டத்தட்ட Phonology”)

எழுத்துகள் சேர்ந்து ”சொல்” ஆகும். இந்தச் சொற்களின் வகை (பெயர், வினை, இடை, உரி நான்கு!) அவற்றின் உருவாக்கம், பண்பு, பயன்பாடு இப்படி அலசுவது ”சொல்லிலக்கணம்” (ஏறத்தாழ ”Morphology”)

சொற்கள் சேர்ந்து பாடலாகவோ, வாக்கியமாகவோ ”பொருள்” தரும். இதை அலசுவது ”பொருளிலக்கணம்”.

ஆனால், பொருளிலக்கணம் என்பது சிறப்பாக ”பாடுபொருள்” பற்றிய இலக்கணம். பாடலில் எதைப் பற்றிச் சொல்வது, அதை எப்படிச் சொல்வது என்று அலசுவது. இப்படி ஒரு அலசல், இந்தளவுக்கு விரிவாகவும் ஆழமாகவும் தமிழில் மட்டுமே உள்ளது!

பொருளிலக்கணம் தமிழுக்கே உரிய சிறப்பு இலக்கணம். பொருள் ”அகப்பொருள்” (காதல், திருமணம்) ”புறப்பொருள்” (வீரம், கொடை, பண்பு) என்று இரண்டு நிலையில் அலசப்படும். இதைப் பற்றிப் பின்னர் விரிவாகப் பேசலாம்!

தொல்காப்பியத்தின் பொருள் அதிகாரத்தில் ஒரு சின்ன பகுதியாக அலசப்பட்ட இரண்டு விஷயம் ”யாப்பு” , ”அணி”. தொல்காப்பியருக்குப் பின் வந்த காலத்தில் இவை நன்றாக விரிவடைந்து தனித்தனி இலக்கணங்களாக வடிவெடுத்துவிட்டன.

”யாப்பிலக்கணம்” கவிதை, பாடல், செய்யுளின் கட்டமைப்பைப் பற்றி அலசுவது. ஓசைநயம், சொல்நயம், எது எப்படி இருந்தால் என்ன பாட்டு என்றெல்லாம் அலசும். இதைத்தான் நாம் முதலில் கற்றுக்கொள்ளப் போகிறோம்.

”அணியிலக்கணம்” என்பது பாடலில் அமையும் அழகு நலன்கள் (aesthetics) பற்றி அலசுவது. இதையும் கொஞ்சம் விரிவாகக் கடைசியில் பேசலாம்.

ஆக, தொல்காப்பியர் காலத்தில் மூன்றாக இருந்த தமிழ் இலக்கணவகை அவருக்குப் பின்னால் ”ஐந்து“ என்று வளர்ந்தது. இதுதான் தமிழின் ஐந்திலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி.

இலக்கணம் என்பது மாறிக்கொண்டே இருப்பது. மொழி வளர வளர இதுவும் மாறும். எனவேதான் தொல்காப்பியருக்குப் பின்னும் பலப்பல இலக்கண நூல்கள் தோன்றின. இலக்கணத்தின் வளர்ச்சி காரணமாய் பின் வந்த பல நூ ல்கள் ஒரு குறிப்பிட்ட இலக்கணத்தை மட்டுமே அலசின. தொல்காப்பியத்தைப் போல ஐந்து இலக்கணத்தையும் அலசும் நூல்கள் மிகக் குறைவு. நான் எனக்குத் தெரிந்த அளவில் முக்கியமான இலக்கண நூல்களைக் கீழே குறிப்பிடுகிறேன், இயன்றவரை இவற்றைப் படித்துப் பார்க்கவும்:

தொல்காப்பியம் (தொல்காப்பியர், ‘கி.மு. 500) எழுத்து, சொல், பொருள் (யாப்பு, அணி)

நன்னூல் (பவணந்தி முனிவர், ‘கி.பி.1300) எழுத்து, சொல்

புறப்பொருள் வெண்பாமாலை (ஐயனாரிதனார், ‘கி. பி.900) புறப்பொருள்

நம்பியகப்பொருள் (நாற்கவிராச நம்பி, ‘கி.பி.1300) அகப்பொருள்

யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகை (அமுதசாகரர், ‘கி.பி.1100) யாப்பு

தண்டியலங்காரம் (தண்டி, ‘கி.பி.1000) அணி

யாப்பிலக்கணம்:

இதைத்தான் 15 முதல் 20 பாடங்களில் (அத்தியாயங்களில்) நாம் விவரமாக கற்கப் போகிறோம். என்றாலும் ஒரு பருந்துப் பார்வையாய் இதனைக் கொஞ்சம் விவரித்துவிடுகிறேன்.

”யாப்பு” என்றால் ”கட்டுதல்” என்று பொருள். ”யாக்கை” என்பது உடம்பு (பலவித மூலக்கூறுகளால் கட்டப்பட்டது!) செய்யப்படுவது செய்யுள். பாடல், கவிதை எல்லாம் இதுதான்.

செய்யுளின் உறுப்புகள் என்ன? எவற்றினால் அது கட்டமைக்கப்படுகிறது என்பதே யாப்பிலக்கணத்தின் அடிப்படை கேள்வி. இதற்கு விடையாக நம் முன்னோர் ஆறு விஷயங்களைக் கண்டறிந்துள்ளனர் (அவை எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை)

இவற்றின் வகை என்னென்ன, எதை எப்படி சேர்த்தால் (யாத்தால்) எந்த மாதிரியான ஓசை நயமும், தொனியும் வரும் என்று அலசி இது இது இந்த ”பா” (அல்லது பாவினம்) என்று வகைபடுத்தியுள்ளனர்.

”பா” என்பது அடிப்படையான அமைப்பு. நான்கு வகை உள்ளது: வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா.

”பாவினம்” என்பது ஒரு ”பா”வைச் சேர்ந்த, அதனோடு தொடர்புடைய அமைப்பை உடையது் மூன்று வகை: தாழிசை, துறை, விருத்தம் (நான்கு பாவகைக்கும் இம்மூன்று வகை பாவினமும் உண்டு, எனவே மொத்தம் 4 ஒ 3 ஸ்ரீ 12 பாவினம் ஆகும்!)

ஓரளவு ஓசை அமைப்போடு எழுதப்படும் எந்தப் பாட்டையும் இந்த வகைகள் ஏதோ ஒன்றினுக்குள் அடக்கிவிடலாம்.

மேலே கடைசியாகச் சொன்னதில் இரண்டு குறிப்புகள் உள்ளன:

1. இலக்கணப்படி பாட்டெழுதுதல் எளிது,
2. எழுதப்பட்ட பாட்டிற்கேற்பவே இலக்கணம்!

நல்ல கவிதைக்கு அடிப்படை ஓசைதான், அது இல்லையேல் அது வெறும் வாக்கியம்தான் (என்னதான் மடக்கி மடக்கி எழுதினாலும் செல்லாது!)

சரி, தயாராகுங்கள் கவிதை இலக்கணம் கற்போம்!

# ஒரே காடு, ஒரே இராகம்!!!

”சிங்கராஜா புதிய உத்தரவைப் போட்டிருக்கிறார்... ”

ஊரின் தண்டோரா போடும் குரங்கண்ணன் சொல்லிக்கொண்டிருந்தார். பல இராகங்கள், பல தாளங்கள் என்று மிருகங்கள் தங்களின் அரிய நேரத்தை இசையில் செலவழித்துக் காட்டின் பொருளாதரத்தைச் சீரழிக்கின்றன, அதன் காரணமாக இனிமேல் நாட்டில் ஒரே ஒரு ராகம் மட்டுமே பாடப்படும். மீறினால் இராஜதண்டனை வழங்கப்படும். எல்லா மிருகங்களும் மிகுந்த சோகத்தில் மூழ்கின.

இந்தப் பிரச்சனையை எப்படி தீர்ப்பது? என்று யோசித்துக் கரடி அமைச்சரிடம் முறையிட்டன, ”எப்படி எல்லா நேரமும் ஒரே ராகத்தைக் கேட்க முடியும்?” குட்டிமுயல் கரடியிடம் கேட்டது. கரடியாரும் யாரும் கவலைப்படாதீர்கள் , இதற்கு ஒரு முடிவு கட்டுவோம் என்று சமாதானம் சொல்லி அனுப்பி வைத்தார்.

அடுத்தநாள் காலையில், சிங்கராஜா அரண்மனைக்குப் பக்கத்துக் காட்டு ராஜாவிடமிருந்து ஒரு அழைப்பு வந்தது. தன் சிங்க மகளின் திருமணத்தை முன்னிட்டு, எல்லா காட்டு சிங்கராஜாக்களுக்கும் விருந்து அளிப்பதாகவும், அதில் நம் சிங்கராஜா நிச்சயம் கலந்துகொள்ள வேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

நம் சிங்கராஜாவும் பரிசுப்பொருட்கள், சில நாள்கள் தங்கத் தேவையான பொருள்கள் எல்லாம் எடுத்துக்கொண்டு, பக்கத்துக் காட்டுக்குச் சென்றார். மதிய வேளையில் , பக்கத்துக் காட்டை அடைந்த சிங்க ராஜாவுக்கு , முருங்கைக்காய்ச் சாம்பார், முருங்கைக்காய்ப் பொரியல் , முருங்கைக்காய்க் கூட்டு என்று ஒரே முருங்கைக்காய் மயமாய் விருந்து தடபுடலாக இருந்தது.

நம் சிங்கராஜாவும் விருந்தை ஒரு பிடி பிடித்துவிட்டு, ஓய்வெடுத்தார். இரவு வேளை ஆனதும், உணவு உண்ணப் பணியாட்கள் அழைக்க, உணவு உண்ணும் அறைக்குச் சென்ற நம் சிங்கராஜாவிற்கு ஒரே அதிர்ச்சி. மதியம் உண்ட அதே உணவு வகைகள், முருங்கை மயம். ஏதும் சொல்ல முடியாமல் சாப்பிட்டுவிட்டு வந்தார்.



சில காரணங்களால், விழா ஒரு வாரம் தள்ளிப் போவதாகவும், அந்த ஒரு வாரமும் இங்கேயே தங்க வேண்டும் என்றும் அந்தப் பக்கத்துக் காட்டு சிங்க ராஜா கேட்டுக்கொண்டார். ஒரு வாரமும் முருங்கைதான் . பொறுமை இழந்த நம் சிங்கராஜா, பணியாளரிடம் ”உங்கள் காட்டில் வேறு உணவுகளே இல்லையா? அல்லது என்னை அவமானப்படுத்துகிறாரா உங்கள் மன்னர்?” என்று பொங்கி எழுகிறார்.

பொறுமையாகப் பணியாள் , ”ஐயோ சிங்கராஜா, உங்களைப் போய் அவமானப்படுத்துவோமா? எங்கள் ராஜா போன வாரம் உங்கள் காட்டில் வாழும் எங்கள் தூதரைச் சந்தித்தார். நீங்கள் நேரத்தை உபயோகமாக செலவிட பல இராகங்கள் தாளங்கள் எல்லாம் வீண், இனி ஒரே ஒரு இராகம் மட்டுமே பாடப்பட வேண்டும் என்று இட்ட கட்டளையைக் கேட்டு உங்களின் அறிவாற்றலை எண்ணி, அதையே பின்பற்றி ஒரு கட்டளையைக் காட்டில் அமல்படுத்தியிருக்கிறார்.

அதாவது, பல காய்கள், பல வகை உணவுகள் சமைக்க ஆகும் நேரத்தை மிச்சப்படுத்தி அதை உபயோகமாய் நம் காட்டின் நலனுக்காகப் பயன்படுத்த, ”இனி நம் காட்டின் காய் முருங்கைக்காய் மட்டுமே. அதை விடுத்து வேறு எந்தக் காயும் சமைக்கப்படக் கூடாது என்று உத்தரவிட்டிருக்கிறார்” என்று சொல்லி முடித்தார்.

இதைக் கேட்ட நம் சிங்கராஜாவுக்கு எல்லாம் புரிந்துபோயிற்று. அவரின் இசை பற்றிய கட்டளையை மாற்றவே இந்த விருந்தும், முருங்கைக்காய் உணவும் என்று. உடனே, அரசரைப் பார்த்து, தன் தவற்றைத் தான் உணர்ந்துவிட்டதையும், உடனே தன் காட்டிற்குச் சென்று அந்தக் கட்டளையை மாற்றப்போவதையும் சொல்லித், தான் உடனே கிளம்புவதாகவும் சொன்னார். ஆனால் மன்னரோ, இரவு விருந்தை முடித்துவிட்டு, அடுத்தநாள் காலையில் செல்லலாம் என்று கூறிவிட்டார்.

ஆனாலும், திரும்ப முருங்கையை உண்ண நம் சிங்கராஜாவிற்கு மனமில்லை, இருப்பினும் மன்னரின் வேண்டுகோளை மறுக்கவும் இயலவில்லை. மிகுந்த தயக்கத்திற்குப் பிறகு , உணவு அறைக்குச் சென்ற நம் சிங்கராஜாவிற்கு ஒரே ஆச்சர்யம். அங்கு பலவகை உணவுகள் இருந்தன, பல காட்டு சிங்க ராஜாக்களும் இருந்தார்கள். மகிழ்வோடு விருந்தை முடித்து, அடுத்தநாள் காலையில் நம் சிங்கராஜா நம் காட்டிற்கு வந்து சேர்ந்தார்.

முதல் கட்டளையாக, எல்லா ராகங்களையும், தாளங்களையும் மிருகங்கள் தங்களின் விருப்பத்திற்கு ஏற்பப் பாடவும், ரசிக்கவும் முடியும் என்று சொல்லிவிட்டார் என்பதை நாம் கூறவும் வேண்டுமா என்ன?



**கானான் தேசத்துக் காளி**

**தற்போதைய லெபனான், இஸ்ரேல், ஜோர்டான் மற்றும் சிரியா பகுதிகளில் அக்காலத்தில் கானான் தேசம் என்று அழைக்கப்பட்டது. இங்கு யூதர்கள் வருவதற்கு ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அதாவது கிமு 3000 ஆண்டுகளில், செமிட்டிக் சமயங்கள் செழித்து வளர்ந்த இப்பகுதி, லேவண்ட் என்றும் அழைக்கபடுகிறது.**

**இந்த செமட்டிக் சமயத்தில் இந்திய சமயங்கள் போன்று, பல தெய்வ வழிபாடு உள்ளது. இந்திய சமயங்களில் காணப்படும் பல தெய்வகளின் பெயர்களும் பண்டைய கானான் தேசத்து தெய்வங்களுடம் ஒத்துப்போகின்றது.**

**அவற்றில் ஒரு சிற்பத் தொகுதியில் “காளி” போன்ற ஒரு தெய்வத்திற்கு குழந்தையைப் பலியிடுவது போன்ற சிற்பம் உள்ளது. இந்த சிற்பத்தின் படிமவியலை கூர்ந்து நோக்கினால், இந்தியாவில் காணப்படும், காளியின் சிலை போன்று உள்ளது. அச்சிலையில் உள்ள ஆயுதங்களும் இந்தியச் சிலைகளின் படிமவியலோடு ஒத்துபோகின்றது. காளியின் அடியில் உள்ளத் தலை போன்று இச்சிலையிலும் உள்ளது.**

**கானான் தேசத்துக்கும், இந்திய சமயங்களுக்கும் உள்ள தொடர்புகள் பற்றி ஆய்வுகள் நடந்து வருகின்றன.**


ஆ


ஏ


ஈ


ச


க



ம


ந

# தமிழ் - பிராமி



த


ப



உ



வ



ய

கல்வெட்டு கற்போமா? சொல்கிளியே முன்வந்து!
நூற்றாண்டு பலகடந்தும் மாற்றங்கள் இன்றி
கடந்திட்ட காலத்தின் கதைசொல்லும் கற்களைப்
படித்திடுவோம் வாவா நீ, பழகிவிட்டால் எளிதே!

எழுத்துக்கு இடையே இடைவெளிகள் இல்லை
அழுத்தி வைக்கின்ற புள்ளிகளும் இல்லை,
ஆனாலும் கொஞ்சம் ஆர்வத்துடன் படித்தால்
போனநூற் றாண்டுகளின் பொக்கிஷங்கள்
அறிவோம்...

கத்திபோல இருப்பதுதான் காவண்ணா பாரு,
சுத்தியல்போல் இருக்குமிது நாவண்ணா தேறு!
கரண்டிபோல இருக்குறது சாவண்ணா பாரு,
ஒருசாவி போலிருக்கும் வாவண்ணா தேறு!

பறவைவாய் போல்விரியும் ஆவண்ணா பாரு,
இருபுறமும் புள்ளிக்கோடு ஈயண்ணா தேறு!
நிக்கும்பாம் புருவமதே ஊவண்ணா பாரு,
முக்கோண வடிவமது ஏவண்ணா தேறு!

வலம்போல் இருப்பதுவே யாவண்ணா பாரு,
நீள்கழுத்து ஒட்டகமே தாவண்ணா தேறு!
கொக்கிபோல இருப்பதுதான் பாவண்ணா பாரு,
பக்கத்திலே பானையது மாவண்ணா தேறு!

மற்றதையும் இதுபோல மனத்துக்குள் ஏற்று
கற்றறிந்து இதன்சிறப்பைக் காலமெல்லாம்
போற்று!

- கவிஞர். வெண்கொற்றன்

# திருவள்ளூர் திருக்கோயில்கள் #1

## ஒரு பயணம் ஒரு பார்வை! - தாமரை

ஒவ்வொரு கோடை விடுமுறைக்கும் தமிழகத்தின் கோயில்களையும் பழமைச்சின்னங்களையும் கண்டுவருவதே எங்கள் வாடிக்கை. விடுமுறை என்றதும் தென்தமிழ்நாடு ஓடிவிடும் நாங்கள் இம்முறை வடதமிழ்நாட்டின் கோயில்களை முதலில் கண்டுவிடத் திட்டமிட்டோம். திருவள்ளுார் மாவட்ட கோயில்கள் சிலவற்றைக் கண்டும் வந்தோம்.

நாங்கள் சென்றதில் பெரும்பான்மையானவை பொன்னேரி வட்டத்தைச் சுற்றியுள்ளவை.

பொன்னேரியிலேயே இருக்கும் அகத்தீசுவரர் திருக்கோயில், கரிகிருட்டிணப் பெருமாள் திருக்கோயில், பொன்னேரியிலிருந்து தச்சூர் கூட்டுச்சாலைக்குப் போகும் வழியில் இருக்கும் பஞ்செட்டி (பஞ்சேஷ்டி) திருக்கோயில் (இதுவும் அகத்தீசுவரர் கோயில்தான்!), பொன்னேரி பழவேற்காடு பாதையில் இருக்கும் பழமைவாய்ந்த திருப்பாலைவனம் திருப்பாலீசுவரர் திருக்கோயில், அதற்குக் கொஞ்சம் முன் அமைந்துள்ள சின்னக்காவனம் நூற்றியெட்டீசுவரர் திருக்கோயில், மீஞ்சூரில் இருக்கும் திருவுடையம்மன் கோயில், மண்ணாரீசுவரர்-பச்சையம்மன் திருக்கோயில் மற்றும் வடகாஞ்சியாக அமைந்த ஏகாம்பரநாதர் மற்றும் வரதராசர் திருக்கோயில்கள், மற்றும் பொன்னேரி-மீஞ்சூர் இடையில், அனுப்பம்பட்டு தொடர்வண்டி நிலையத்திலிருந்து நான்கு கி.மீ. தொலைவில் உள்ள தேவதானம் என்னும் அழகிய பெருமாள் கோயில் ஆகிய திருத்தலங்களுக்கு மே மாதம் 3, 4 ரூ 5 ஆகிய மூன்று நாள்களும் சுற்றினோம் (2017).

திருப்பாலைவனம் திருப்பாலீஸ்வரர் கோயில்:

திருப்பாலைவனம் மிகப் பழமையான திருக்கோயில். முதல் குலோத்துங்கன் கண்டெடுத்த இலிங்கமே இங்கு பிரதிட்டையில் உள்ளது. இது கோடரி வெட்டுடன் உள்ளது, கோயில் கட்ட மரங்களை வெட்டியபொழுது கண்டெடுக்கப்பட்ட இலிங்கம் இது என்று தலவரலாறு கூறுகிறது.

அம்மனோடு திருப்பாலீசுவரர் உறையும் இத்திருக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், முகமண்டபம், முகப்புமண்டபம் ஆகியவற்றைக் கொண்டுள்ளது. இதன் கருவறை மற்றும் விமானம் தூங்கானைமாட வகையைச் சேர்ந்தவை.





இக்கோயில் பல காலங்களில் பல மன்னர்களால் திருப்பணி செய்யப்பெற்றுள்ளது. இக்கோயில் கருவறையின் வெளிச்சுற்றுப் பிரகாரத்தில் பல மன்னர்களின் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. கோயிலின் வெளிச்சுவரிலும் கல்வெட்டுகள் உள்ளன. கல்வெட்டுகள் தமிழ், தெலுங்கு மொழிகளில் உள்ளன. மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராசேந்திரன், சடையவர்மன் சுந்தரப்பாண்டியன், விசயநகர மன்னர்கள் ஆகியோரின் கல்வெட்டுக்கள் இங்குள்ளன.

ஒரு தனி நூலே எழுதும் அளவிற்குச் சிறப்புகளும் பெருமைகளும் வாய்ந்தது இக்கோயில் (அப்படி ஒரு நூலும் உள்ளது. தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை வெளியீட்டு எண் 248, ஆசிரியர்: திருமதி எம். எஸ். ஆயிஷா பேகம், 2011). இயற்கைச் சுற்றுப்புறமும், வரலாற்றுச் சான்றுகளும் நிறைந்து வருவோரை மீண்டும் மீண்டும் வரத் தூண்டும் அழகிய கோயில் இது.

சின்னக்காவனம் நூற்றியெட்டீஸ்வரர் கோயில்:

பெரிய இலிங்கத்திருமேனியில் நூற்றியெட்டு இலிங்கங்கள் அமையப் பெற்றிருக்கும் சிறப்பை உடையது சின்னக்காவனம் நூற்றியெட்டீசுவரர் திருக்கோயில். இங்கு அரிதாக காணப்படும் ”ஏர்அழிஞ்சல்” மரம் தல விருச்சமாக உள்ளது. முன்பு பழமை ரூ பசுமை அழகுடன் மிளிர்ந்த இக்கோயில் இப்போது திருப்பணிக்கு இரையாக்கப்பட்டுள்ளது!

பஞ்செட்டி அகத்தீசுவரர் கோயில்:

அகத்தியர் ஐந்து வேள்விகள் இயற்றி இறைவனை வணங்கியதால் ”பஞ்சேஷ்டி” (மருவி பஞ்செட்டி) என்று அழைக்கப்படும் இத்தலத்தில் அகத்தீசுவரர் திருக்கோயில் உள்ளது. நாங்கள் சென்றபோது கோயில் திறக்கப்பட்டிருக்கவில்லை என்றதும், என்னடா இது! என்றிருந்த எங்களை இந்தக் கோயிலின் கோபுரம் அரைமணிநேரத்திற்கும் மேலாக பிடித்து வைத்தது என்றால் மிகையில்லை. இந்தக் கோயிலின் இராசகோபுரம் மிக அழகானது, கீழே கல்லாலும், மேலே ஐந்து நிலைகளுடன் சுதையாலும் இரண்டிலும் மிக அழகிய நுணுக்கமான சிற்பங்களைக்கொண்டு நம்மை ஈர்க்கிறது. கோயிலின் முன்புறத்தில் அகத்தியர் தீர்த்தம் என்னும் அழகிய குளம் உள்ளது. 1911ஐச் சேர்ந்த கல்வெட்டு ஒன்றும் உள்ளது.

பொன்னேரி கரிகிருட்டிணப் பெருமாள் கோயில்:

பொன்னேரி தேரடிக்கு அருகில் கரிகாலச் சோழனால் (அல்லது அவனது ஆணைக்கிணங்க) கட்டப்பட்டதாய் எண்ணப்படும் கரிகிருட்டிணப் பெருமாள் கோயிலில் வலது கையில் சாட்டையுடனும் இடதுகையை இடுப்பில் வைத்துக்கொண்டும் சாய்ந்து நின்றவாறு மாடு மேய்ப்பவரைப் போலக் காட்சியளிக்கிறார் பெருமாள். கோயில் அமைந்திருக்கும் இடமான ”திருஆயர்பாடி” என்பதற்கு ஏற்ப கிருட்டிணரின் திருவுருவும் அமைக்கப்பட்டிருப்பது சிறப்பு. இக்கோயிலில் உள்ள மண்டபங்கள் அழகிய சிற்ப வேலைப்பாடுகள் அமைந்த தூண்களுடன் கண்கவர் காட்சி தருகின்றன. கோயில் மண்டப உத்திரத்தில் மிக அதிகளவில் பாம்பு, மீன், பல்லி போன்ற சிற்பங்கள் காணக்கிடைக்கின்றன.

பொன்னேரி அகத்தீசுவரர் கோயில்:

பொன்னேரி சிவன் கோயில் என்று அறியப்படும் அகத்தீசுவரர் திருக்கோயில் அகத்திய முனிவர் இறைவனை வழிபட்ட இடம் என்று அறியப்படுகிறது. தூங்கானைமாடமாய் அமைந்துள்ள





கருவறையின் பின்புறச் சுவரில் ஏர்க்கலப்பைகள் பொறிக்கப்பட்டுள்ளன (இவ்வூருக்குப் ”பொன்னேரி” என்று பெயர் வந்ததன் காரணம் பொன்னால் செய்த ஏரினால் உழப்பட்டதே என்றும் கூறப்படுகிறது) சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த மண்டபங்களைக் கொண்டது. கோயில் குளத்தின் அருகில் உள்ள மண்டபத் தூண்கள் அழகிய சிற்பங்கள் நிறைந்துள்ளது.

கரிகிருட்டிணப் பெருமாளும் அகத்தீசுவரரும் ஒவ்வொரு ஆண்டும் சித்ரா பௌர்ணமியை அடுத்த ஐந்தாவது நாள் ஓரிடத்தில் (பொன்னேரி தேரடி அருகில்) ஒருங்கே காட்சிதரும் □சந்திப்பு□ என்னும் விழா நிகழ்கிறது.

மீஞ்சூர் திருவுடையம்மன் கோயில்:

திருவுடையம்மன் கோயில் 400-500 ஆண்டுகள் பழமை வாய்ந்ததாய் இருக்கலாம். நாங்கள் சென்றிருந்தபோது திருப்பணி என்ற பெயரில் கோயிலின் பழமைச் சிதைக்கப்பட்டிருந்தது. சில சற்றே பழைய கல்வெட்டுகள் (தமிழ், தெலுங்கு) உள்ளன. அவைகளின் மீது சிமெண்ட் முலாம் பூசப்பட்டிருந்தது! அழகிய சிற்பங்கள் வாய்ந்த முன்மண்டபம் டைல்ஸ் அழகிற்குப் பணிந்து கொண்டிருக்கிறது! பௌர்ணமி அன்று தரிசிக்கப்படும் மூன்று அம்மன் கோயில்களில் இதுவும் ஒன்று. இம்மூன்று அம்மன் திருமேனிகளும் ஒரே சிற்பியால் செய்யப்பட்டவையாய் இருக்கலாம் என்கின்றனர்.

மீஞ்சூர் மண்ணாரீசுவரர் பச்சையம்மன் கோயில்:

வெளியில் ஐயனார், முனீசுவரர் ஆகிய காவல் தெய்வங்களும், நேர்த்திக்காக செய்த குதிரைச் சிலைகளும் கொண்டது. கருவறை அம்மன் மிக அழகான தோற்றம் கொண்டவர். கருவறையில் சப்தகன்னியரும் உள்ளனர்.



மீஞ்சூர் ஏகாம்பரநாதர் மற்றும் வரதராசர் திருக்கோயில்கள்:

இக்கோயில்கள் சுமார் 400 ஆண்டுகளுக்கு முன் மீஞ்சூரை வடகாஞ்சி”யாக ஆக்க முயன்ற ஒரு குறுநில மன்னன் கட்டியவை. திருப்பணி என்ற பெயரில் ஏகாம்பரநாதர் - காமாட்சி அம்மன் கோயில் தன் பழமையை இழந்துவிட்ட போதிலும், வரதராசர் கோயில் இன்னும் அதற்குச் சிக்காமல் அழகிய ஐந்துநிலை கோபுரமும், மிகப் பிரம்மாண்டமான மூலவருடனும் நம் மனத்தை மயக்குகிறது. காஞ்சி வரதராசர் கோயில் தேரோட்டத்தின் போதே இங்கும் தேரோட்டம் நிகழ்த்தும் வழக்கம் தொன்றுதொட்டு இருக்கிறதாம்.

அனுப்பம்பட்டு தேவதானம் கோயில்:

தேவதானம் என்னும் கிராமத்தில், மிக அழகிய இயற்கை சுற்றுப்புறத்திற்கு நடுவில் உள்ள திருக்கோயிலில் மிகப் பிரம்மாண்டமாக ஆதிசேடன் மீது சயனகோலத்தில் காட்சித்தருகிறார் பெருமாள். ஏகாதசி அன்று மிகச் சிறப்பான வழிபாடு நடைப்பெறும்.



சுமார் 15-20 ஆண்டுகளுக்கு முன் இக்கோயிலைப் பார்க்கும்பொழுது ”இப்படியும் ஒரு கோயில் இருக்குமா!” என்று எண்ண வைக்கும் அளவிற்கு இடிபாடுகளுக்கு இடையில் கிடந்த கோயில் இன்று ஓரளவு அதன் பழமை சிதையாமலே சீராக்கப்பட்டுள்ளதைக் காண்கையில், திருப்பணி என்ற பெயரில் நாசமாகும் பிற கோயில்களுக்கு இது எத்தனையோ பரவாயில்லை, என்ற மகிழ்ச்சி மனத்தில் தோன்றியது. அச்சிறுமகிழ்வுடனே எங்களின் இந்த மூன்று நாள் சிறுபயணம் இனிது முடிந்தது.

# அக்கம்மா
## (கதை அறிமுகம்)

பாண்டியர் ஆட்சி முடிவுற்று, மதுரையில் இருந்து திருச்சிவரை புதிய ஆட்சி பரவியிருந்த சமயம் அது. வீட்டுச்சிறையில் வைத்திருந்த மருமகளுக்குத் திடீரென்று பிரசவ வலி ஏற்பட்டது. பிரசவத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளை அரண்மனை மகளிரும், அவளைச் சிறைபடுத்திய அக்கிழவியும் மும்முரமாகச் செய்தனர். தம் மருமகள் மூலம், குலம் காக்க ஒரு குழந்தை சற்றுநேரத்தில் பிறக்கப்போகிறது என அரசியான கிழவி நினைத்து அகமகிழ்கின்றாள். பிரசவ வலியின் உச்ச நொடியில் அழகான ஆண்குழந்தை பிறந்தது.

பிறந்த குழந்தையைத் தொட்டு மகிழ்கின்றாள் கிழவி, அது அக்கிழவியின் விரல்களை இறுகப் பிடித்துக்கொள்கிறது. என்னை விட்டுவிடாதே என்பது போல அவளிடம் கெஞ்சியது.
பிரசவ வலியின் வேதனைகளை விட பன்மடங்கு வலி தரும் ஒன்று, அவளைத் தற்போது தொற்றிக்கொண்டது. தனது மருமகளின் அருகில் அக்குழந்தையை எடுத்துச் சென்று, ”அம்மா, குழந்தையைப் பார்” என்றாள் கிழவி. பிரசவ மயக்கம் தெளிந்து எழும் அவள் தனது குழந்தையை ஏறெடுத்தும் பார்க்க மறுக்கின்றாள். ”குழந்தைக்கு தாய்ப் பாலாவது கொடு” என்று கேட்டாள்.

நான்கு மாதங்களாகத் தன் மனதை இறுகப்படுத்திய சங்கல்பத்தை, இப்பிஞ்சு உதடுகள் தன் மார்பில் பட்டால் தகர்த்துவிடுமோ? எனக் கருதித் தாய்ப்பாலைக் கூட அக்குழந்தைக்குத் தர மறுக்கின்றாள் தாய். அது என்ன? குழந்தைப் பிறந்தவுடன் இறந்த கணவனுக்காக சதியில் விழவேண்டும் என்பதே அந்தக் கொடூர முடிவு.

இளமையிலே கணவன், அதுவும் நாடாளும் அரசனை இழந்த பின்பு, ”தன் வாழ்வு இப்படி ஆகிவிட்டதே” என மனமுடைந்து, குழந்தை வயிற்றில் இருக்கும் போதே பலமுறை தற்கொலைக்கு முற்பட்ட மருமகளை, வீட்டுச் சிறையிலேயே வைத்துப் பாதுகாப்பாகப் பார்த்துக்கொண்டாள் அக்கிழவி. சொல்லப் போனால் குழந்தை பிறப்புவரையில் அவளின் மரணம் தள்ளிப் போடப்பட்டிருந்தது.
கணவனையும் மனைவியையும் சேர்த்த அக்கினிச் சடங்குகள், இன்று குழந்தையையும் தாயையும் பிரிக்கப் போகிறது. ஆம் அன்று பத்தினியாய் வாழ்வதென்பது மரண தண்டனை அளிக்கக் கூடிய மாபெரும் தவறு போலும்! கணவன் இருக்கும்வரை பத்தினியாய் வாழ்ந்தவளுக்குப் பிள்ளை பெற்ற பின்னும் பத்தினியாய் வாழ்வது கடினமா என்ன? அல்லது, காப்பாற்ற கணவனும் இல்லை, பாதுகாக்க மாமனாரும் இல்லை என்பதாலா? அல்லது, இவளின் இளமைக்காக யாரேனும் குழந்தையை ஏதும் செய்து விடுவாரோ என்ற தாய்மையின் அச்சமா? விதியின் சதியா? அல்லது சதியின் நியதியா?

கணவனைத் தவிர யாரும் அணைத்துவிடக் கூடாது என்று சமூகம் நினைத்த அவளின் உதிரமும், நீரும் வடியாத உடலின் ஒவ்வொரு பாகத்தையும் தொட்டுத்தடவி பரவிப்படர்ந்து ஊடுருவி, அதனை உருக்கி சுவைத்து உண்டு களித்தான் அக்கினி பகவான். சதி ஏறி இவ்வுலக வாழ்வுக்கு விடைகொடுத்து கணவனை நோக்கி பயணமானாள் அந்த இளந்தாய்.

கணவனையும், மகனையும் இழந்துவிட்ட அக்கிழவி மற்ற ஆண் வாரிசுகள் யாரும் இல்லாத நிலையில், தாயை இழந்த தன் பேரக்குழந்தையையும் நாட்டையும் காக்க அரியணை ஏறினாள்.
வயதானவள்தானே நாட்டை ஆள்கிறாள், ஆண்கள் யாரும் இல்லை என்று மராத்தியரும், தஞ்சை நாயக்கரும், மொகலாயரும், சேதுபதியும் மதுரையைப் பலமுறை முற்றுகையிட ஆரம்பித்தனர்.

வீரம், விவேகம் இரண்டுமே பெண்களிடம் இருக்கும் என்பதை நிரூபிக்கும் விதமாகப் பல ஆணாதிக்கப் படையெடுப்புகளை முறியடித்தாள். பெண்தானே என்று சுரண்டிப் பார்த்தப் பலரைப் புரட்டியெடுத்துப் பெண்புலியாக இருந்தாள்.

தனது நாட்டின் மீது படையெடுக்கத் தஞ்சைக் கோட்டையில் காத்திருந்த மராட்டியத் துப்பாக்கிப் படையை, ஆங்கிலத்தில் கூறுவது போல, Best Defense is Offense (தாக்குதலே சிறந்த அரண்?) எனும் தந்திரத்தின்படி, இவள் முந்திச் சென்று கோட்டையை முற்றுகையிட்டு வெற்றிகொண்டாள்.

தன்னைச் சுற்றிலும் எதிரிகள் உருவாகினாலும், ”தன் நாட்டு மக்கள்தான் தனக்குப் பலம்” என்பதை நன்கு உணர்ந்திருந்ததால், வேறுபாடுகள் பாராமல் கோவில்களுக்கும், மசூதிகளுக்கும், பல அற நிலையங்களுக்கும் கொடைகள் அளித்தாள்.

விவசாயத்தைப் பெருக்க ஏரிகளையும், குளங்களையும் தூர்வாரி நீர் நிலைகளை வாய்க்கால்கள் மூலம் இணைத்தாள். தனது படைகளுக்காகவும், வணிகர்களுக்காகவும், மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்கும், ராமேஸ்வரம் கோவிலுக்கு வரும் பக்தர்களுக்காகவும், சிராப்பள்ளி முதல் குமரிமுனை வரை நெடுஞ்சாலையை உருவாக்கினாள். இன்று வரை இந்நெடுஞ்சாலை அவளின் பெயராலேயே அறியப்படுகிறது. ஆங்கிலேயர்கள் இவரை சுழயன ஆயமநச என்றே அழைத்தனர்.

இன்று இருக்கும் அம்மா திட்டத்திற்குப் பல நூறு ஆண்டுகளுக்கு முன்பே அந்த நெடுஞ்சாலைகளில் சத்திரங்கள் அமைத்து அனைவருக்கும் உணவளித்தாள். வணிகத்தைப் பெருக்கப் பல நடவடிக்கைகள் இவரது ஆட்சியில் மேற்கொள்ளப்பட்டது.

திருச்சிராப்பள்ளி மீது தொடர்ந்து பல ஆண்டுகளாக போர்தொடுத்து வந்த தஞ்சை நாயக்கனுக்கு ஒரு சிக்கல் வந்தது. ஆம் தண்ணீர் பிரச்சனை!!!!. காவிரி நீரை எதிரியுடன் பகிர்ந்து அளித்து, இரு அரசுகளிடையே இருந்த பகையையும் போரையும் சமாதான உடன்படிக்கை மூலம் தீர்த்து வைத்தாள். உலகில் அதிகளவு போரில் ஈடுபட்டவளும், தந்திரமாகச் செயல்பட்டுப் பல போர்களைத் தவிர்த்துச் சமாதான உடன்படிக்கைகளை எதிரிகளுடன் செய்ய வைத்தவளும் இவளே.

பலமுறை படையெடுத்தும் வெற்றி பெற முடியாத நிலையில், பேராசை கொண்ட மைசூர் அரசன், தமிழர்களை வஞ்சிக்க நினைத்து, இன்று போல அன்றும் காவிரியின் குறுக்கே அணையைக் கட்டி காவிரி நீரை திருப்பிவிட எண்ணினான்.

படையெடுத்துச் செல்லும் எதிரி நாட்டின் நீர் நிலைகளை அழிப்பது, வாய்க்கால்களைத் தடுப்பது என்பது சங்க காலப் போர் முறைகளில் ஒன்று. காவிரியின் குறுக்கே அணைகட்டித் தமிழர்களைத் தண்டிப்பது என்பது 500 ஆண்டுகால திட்டம் என்பதும் இது தமிழர் மீதான போர் என்பதும் இதன் மூலம் அறியலாம்.

பதில் மைசூர் அரசனின் ஆணைக்கு இணங்க மழைக்காலத்திற்கு முன்பாகவே, காவிரியின் குறுக்கே அவசர அவசரமாக அணை கட்டி முடிக்கப்படுகிறது. அப்போதுதான் மழைக் காலத்தில் பாசனத்திற்குப் போதிய நீர் கிடைக்காமல் தஞ்சையிலும், திருச்சியிலும் மக்கள் அவதியுற்று, தாகத்திற்காகக் கையேந்தி தன் முன் மண்டியிடுவர் என எண்ணினான்.

வாழ்வாதாரமான நீரை வஞ்சமாக தடுக்கும் மைசூர் அரசனின் செருக்கை அழிக்க நினைத்த கிழவி, இதனைப் போர் அறிவிப்பாக கருதி காவிரி நீர் பாயும் பகுதிகளில் உள்ள அரசர்களுக்குத் தூது அனுப்பி நிலைமையை எடுத்துக் கூறி படையைத் திரட்டுகிறாள். மைசூரை நோக்கித் தமிழகக் கூட்டுப் படைகள் நகர்கின்றது. மைசூர் அரசனும் தனது படைகள் அனைத்தையும் திரட்டிக்கொண்டு தனது நாட்டின் எல்லையை அடைந்து தமிழகக் கூட்டுப்படையை எதிர்கொள்ளக் காவிரிக் கரையோரம் முகாமிடுகின்றான்.

காவிரிக் கரையோரமாக, மைசூரை நோக்கிச் சென்ற தமிழகக் கூட்டுப் படையை, ஒரு இளம் குதிரைவீரன் எதிர்கொள்கிறான். கிழவியைப் பார்த்தப்பின் குதிரையை விட்டிறங்கி ஓடிவரும் அந்த வீரன் யாரென்று கிழவிக்கு மட்டும்தான் தெரியும்.

”தாயே, ஆதிக்கச் சிறையைத் தகர்த்தோம், நம் உரிமையை மீட்டோம்” என்று ஆர்ப்பரித்து அவள் முன்னே வீழ்ந்த வேகத்தில் அவனின் தலைக்கவசம் கலைந்து முகம் வெளிப்பட்டது. அப்போதுதான் போர் வீரன் உடையில் வந்திருப்பது ஒரு பெண் என்று அறிந்து மற்ற அனைவரும் ஆச்சரியப்பட்டனர்.

முந்தைய இரவில், ரகசியப்படை ஒன்று காடுகளின் வழியே ஊடுருவி அணைக்கட்டை அடைந்தது. மைசூர் மன்னனின் படைகள் அனைத்தும் அணையில் இருந்து, சிறிது தொலைவில் முகாமிட்டிருந்தது. இம்மலைப் பகுதியில் முன்பே மழை ஆரம்பித்திருந்த நேரம். அணைக்கட்டு ஓரளவு நிரம்பி இருந்தது. ரகசியப்படையிலிருந்த வீராங்கனைகள் அனைவரும் அணையின் முக்கியப் பகுதிகளுக்கு, ஒவ்வொருவராகப் பிரிந்து சென்றனர். திடீரென்று ஒரு பெரும் வெடிச் சத்தம் காட்டையே பிளந்தது. காவிரியின் குறுக்கே கட்டியத் தடுப்பு

அணையைத் தஞ்சையில் கைபற்றிய வெடிப் பொருட்களைக் கொண்டு தகர்த்துக் காவிரியை மீட்டது அப்படை.

ஆம், முன்னொரு சமயம் தஞ்சைக் கோட்டைக்கு, ஒரு சிறு குழுவை இரகசியமாக அனுப்பி, அதனை ஊடுருவித் தாக்கி வெற்றி கொண்ட, அதே அக்கம்மாக்கள் படைதான் இன்று அணையை உடைத்தது.

கிழே விழுந்து கிடந்தவளைத் தூக்கி நிமிர்த்தினாள் கிழவி. அழகு மிளிரும் அவளின் கண்ணில் நீர் மல்க, ”அணையின் அடியில் அக்கினி சூரணத்தை நிரப்பி, அதனை வெடிக்கச் செய்து அணைக்கட்டை உடைத்தோம். அனைவரும் உயிர்த் தியாகம் செய்து, காவிரி நீரை விடுவித்தோம். உடைந்தது காவிரி அன்னையின் சிறை, சிதைந்தது செருக்குற்றவர்களின் ஊர்கள், அழிந்தது மைசூரின் படைகள். காவிரி நீர், கரைபுரண்டு நம்மை நோக்கி ஓடிவருகின்றது. இச்செய்தியை அறிவிக்கவே நான் உயிர் தாங்கி வந்தேன். என்னையும் உயிர்த் தியாகம் செய்த நம் அக்கம்மாக்களுடன், வீர சொர்க்கம் சேர அனுமதியுங்கள்” என்று வெற்றிக் களிப்பில் கூறி முடித்தாள்.

இச்செய்தி கேட்டபின், கிழவி அவளின் கரம்பிடித்து காவிரி ஆற்றை நோக்கி நடந்தாள். தமிழகக் கூட்டுப்படைகளும், அவளைப் பின்தொடர்ந்து வறண்ட மணல் நிரம்பிய காவிரி ஆற்றில் இறங்கியது.

தமிழகம் எனும் கணவனை ஆரத் தழுவி அணைக்கப் போகின்றோம் என்ற காதல் களிப்பில் அப்போதுவரை வேகமாக ஓடி வந்த காவிரி நீர், இப்படையைக் கண்டதும், தனது புகுந்த வீட்டாரை எதிர்கொண்டது போல வெட்கித் தயங்கித் தனது ஓட்டத்தைக் குறைத்துக்கொண்டு, மெள்ள மெள்ள அடியெடுத்து நடைபயின்று வந்தாள்.
கிழவியும் கூட்டுப்படைகளும் காவிரி நீரை எதிர்கொண்டு மலர் தூவி வரவேற்று,

”உழவர் ஓதை மதகுஓதை
உடைநீர் ஓதை தண்பதங்கொள்
விழவர் ஓதை சிறந்துஆர்ப்ப
நடந்தாய் வாழி காவேரி.”

எனும் சிலப்பதிகாரப் பாடல் வரிகளுக்கு ஏற்ப இயற்கையும் மக்களும் உழவரும் படைகளும் ஆர்ப்பரிக்கத் திருச்சிராப்பள்ளிவரை நடந்தே ஊர்வலமாக ஆற்றில் அழைத்து வந்தனர்.

பல போர்களைப் புரிந்த பெண்அரசி என்றும் இந்தியாவின் Joan of Arc என்றும் புகழப்படும் இவளது பெயரில் குமரிவரை செல்லும் ”ராணி மங்கம்மாள் சாலை”யில் திருச்சிக்கு அருகில் அமைந்துள்ள வழிபோக்கர் உணவு சத்திரம்தான் இது.

நகரமயமாதலின் அசுர வளர்ச்சியில் பாதிக்கப்பட்டு முகம் காட்டாமல் இது திரும்பி நிற்கின்றது. இச்சத்திரத்திற்குச் செல்லும் பாதைகள் அனைத்தும் மூடப்பட்டுள்ளன. கால ஓட்டத்தில் எஞ்சி இருக்கும் மனித நேயத்தின் அடையாளம் இது.

தன் ஆட்சி முழுவதும் ஊருக்கே உணவளித்து, மக்களின் பசி தீர்த்தவரைக் கடைசியில் பலநாள் பட்டினி போட்டுக் கொன்றான். கொன்றது எதிர்கள் அல்ல, யாருக்குத் தான் தாயாக இருந்து காப்பாற்றி வளர்த்தாரோ அந்தப் பேரனே.

ஏன் என்பதை ”அக்கம்மா” எனும் அடுத்தடுத்து வரும் குறுந்தொடரில் காண்போம். ஆசிரியரின் வேண்டுதலின் பேரில் பெயர் இதில் இணைக்கப்படவில்லை.

சொற்குற்றம், பொருள் குற்றம் இரண்டும் இருப்பின் அதனை மன்னித்து அறிவுரை கூறி ஆசிரியரை வழிநடத்துக.

# அழகிய சோழமாதேவி

-இளமதி



நகரங்களில் கூட்டமாகவே இருக்கும் கோயில்களை விடுத்து அமைதியான அழகான இடங்களில் இருக்கும் பழைமையான கோயில்களைப் பார்ப்பதிலே ஒரு மகிழ்ச்சி இருக்கிறது. அப்படிப்பட்ட இடங்களிலொன்று சோழமாதேவி. சோழமாதேவி பெயரே இனிமையாக இருக்கிறது. இராசராச சோழனின் தேவியருள் ஒருவர் சோழமாதேவி என்பவர். தஞ்சை பெரியகோயிலுக்கு ஆடல்வல்லான், ரிஷபவாகனர் போன்ற செப்புத்திருமேனிகளைச் செய்தளித்துள்ளார் என்பது கல்வெட்டின்மூலம் அறியப்படுகிறது. அவ்வம்மையாரின் பெயரிலேயே இவ்வூர் வழங்கப்படுகிறது.

சோழமகாதேவி

சோழப்பேரரசுகளின் கல்வெட்டுகளில் ”காவரியின் தென்கரை பாண்டிகுலாசினி வளநாட்டுப் பிரமதேயம் சோழமாதேவி சதுர்வேதி மங்கலம எனக்குறிக்கப்பெற்றுள்ள இவ்வூர்

திருச்சி திருவெறும்பூரிலிருந்து தெற்கே செல்லும் சூரியூர் சாலையில் 3 கி.மீ தொலைவில் உய்யக்கொண்டான் ஆற்றின் கரையில் அமைந்துள்ளது சோழமகாதேவி என்னும் சிற்றூர். இவ்வூரில் கைலாயமுடையார் கோயில் உள்ளது.

கைலாயமுடையார்கோயில்

கைலாயமுடையார் கோயில் வரலாற்றுச் சிறப்புப்பெற்றது. முதலாம் இராசராசன் காலத்தில் கட்டப்பட்டு அழகிய சிற்பங்களுடன் காட்சிதரும் சிறிய கோயில். இம்மன்னன் நீர்ப்பாசனத் திட்டங்களுக்கு முக்கியத்துவம் அளித்து காவிரியின் தென்கரையில் அமைந்த மேடான நிலங்களுக்குப் பாசனம் அமைக்க ஒரு சிற்றாற்றினை வெட்டி பல ஏரிகளை இணைத்துப் பாலை நிலங்களை வளப்படுத்தினான், அந்த ஆற்றுக்கு உய்யக்கொண்டான் ஆறு என்று பெயரிட்டான். அந்நீரை முறைப்படுத்திப் பயன்படுத்த உய்யக்கொண்டான் ஏரிவாரியம் அமைத்தான் இராசராசன். அது சோழமாதேவி சதுர்வேதி மங்கலம் சபையோரால் நிர்வகிக்கப்பட்டது. இச்செய்திகளைக்கூறும் அரிய கல்வெட்டுகள் இக்கோயிலில் காணக்கிடைக்கின்றன.

அமைப்பு

உய்யக்கொண்டான் ஆற்றின் வடகரையில் அமைந்துள்ள இச்சிற்றூரின் வடகிழக்குப் பகுதியில் அழகிய கற்றளியாக திருக்கயிலாயமுடையார் கோயில் விளங்குகிறது. கருவறையில் இலிங்கத்திருமேனியாக கயிலாசநாதர் வீற்றிருக்கிறார். உப்பீடம், அதிட்டானம், பித்தி போன்ற கட்டுமானங்களோடு விமானம் காடசியளிக்கிறது. கோட்டத்தில் கணபதி,

தாருகாவனத்துப் பெண்ணொருத்தி பலி செய்ய அதனைக் கபாலத்தில் ஏந்தும் பிட்சாடனர், தட்சிணாமூர்த்தி, சங்கு சக்கரம் தாங்கிய திருமால், நான்முகன், கொற்றவை ஆகிய சிலைகள் காணப்படுகின்றன.
அதிட்டானத்துக் கண்டபாதங்களில் சிறுசிறு சிற்பங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் வாலி சுக்ரீவன் சண்டை, காலனைக் காலால் உதைக்கும் சிற்பங்கள் குறிப்பிடத்தக்கவை. கபோதகத்திற்குக் கீழ் காணப்பெறும் பூதகணங்கள் சோழர் சிற்பக் கலையின் உன்னத வெளிப்பாடுகள்.

கல்வெட்டுகள்

இக்கோயிலில் இராசராசசோழன், இராசேந்திரசோழன், வீரராசேந்திரன் காலத்தைச் சேர்ந்த மொத்தம் 15 கல்வெட்டுகள் காணப்படுகின்றன. முதலாம் இராசேந்திரன் காலக் கல்வெட்டுகளில் அவனது பிறந்த நாளான திருவாதிரை நாளைச் சித்திரை மாதத்தில் கொண்டாடவும், மற்றும் இவ்வூரில் "ஊர்வாரியம்", "உய்யக்கொண்டான் ஆற்று வாரியம்" போன்ற அமைப்புகள் இருந்தது பற்றியும் அறியமுடிகிறது.

வீரராசேந்திரன் கல்வெட்டில் சோழமாதேவி ஊர்சபையார் "சங்கர பகவத் பாதாள்" அருளிய பாஷ்யத்துக்கு சிதாநந்தபடாரர் என்பவர் எழுதிய பிரதிபகம் என்னும் உரையை இவ்வூரில் விரிவுரை செய்பவர்களுக்கு நிலம் தானமாக அளிக்கப்பட்டது என்ற மிக அரிய செய்தியைக் கூறுகிறது. ஆதிசங்கரரையும், அவரது பாஷ்யத்தையும் குறிக்கும் மிகத் தொன்மையான கல்வெட்டு இதுவே என்று தொல்லியல் அறிஞர் இரா.நாகசாமி அவர்கள் தமது கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார்.

சோழமாதேவி கைலாயமுடையார் கோயில் கல்வெட்டுகளில் இங்குக் கோயில் கொண்டு விளங்கும் இறைவன் ஸ்ரீகயிலாயமுடையார், ஸ்ரீகைலாசர், ஸ்ரீகைலாசர் பரமேசுவரர் என்றெல்லாம் அழைக்கப்படுகிறார். இக்கோயிலில் முதலாம் இராசராசனது 8, 13, 15, 26 வது ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் ஏழு காணப்படுகின்றன. இராசராசன் இக்கோயில்மீது எவ்வளவு ஈடுபாடு கொண்டிருந்தான் என்பதைக் கல்வெட்டுச் செய்திகள் கூறுவதைக் காணலாம்..

உவச்சர்கள்

(15 வது ஆட்சியாண்டு கி.பி. 1000) : இக்கல்வெட்டில் தென்கரை பாண்டி குலாசனி வளநாட்டுப் பிரம்மதேயம் ஸ்ரீசோழ மகாதேவி சதுர்வேதிமங்கலம் என்ற நாட்டுப்பிரிவு குறிப்பு கல்வெட்டில் காணப்படுகிறது. கோயில்களில் இசைக்கருவிகளை வாசிப்பவர் உவச்சர்கள் எனப்பட்டனர். இக்கோயிலில் உவச்சப்பணி செய்ய (1) இரண்டாயிரவன் கணத்தனான சோழமாதேவிப் பேருவச்சன் (2) இவன் தம்பி இரண்டாயிரவன் கடம்பனான காந்தருவப் பேருவச்சன் (3) இவன் தம்பி இரண்டாயிரவன் பல்லவராயன் (4) இவன் தம்பி இரண்டாயிரவன் திருவரங்கத்தேவன் என்ற பெயர்கள் கொண்ட ஒரே குடும்பத்தைச் சேர்ந்த நான்கு சகோதரர்கள் நியமிக்கப்பட்டனர். உவச்சப் பணிக்காக அளிக்கப்பட்ட நிலம் "உவச்சப்புறம்"எனப்பட்டது. இவர்களது பணி ஏதேனும் காரணத்தால் நடைபெறாது போனால் கோயிலில் விளக்கு எரிக்க எண்ணெய் தரவேண்டும் என்ற நிபந்தனையுடன் தானம் "இராசராசன்" என்ற பிரம்மஸ்தான மண்டபத்தில் ஊர்சபையினர் கூடி முடிவெடுத்தனர் என்பதை அறிய முடிகிறது. மேலும் கோயிலுக்கு அளிக்கப்பட்ட தானம் எவ்வகையிலாவது கோயிலுக்கே செலவழிக்கப்படவேண்டும் என்ற நல்ல குறிக்கோளையும் உணர்த்துகிறது.

சிதிலமடைந்த நிலையிலிருந்த இக்கோயிலைப் புதுப்பித்த தமிழக அரசின் தொல்பொருள் துறையினர் பாதுகாக்கப்பெற்ற திருக்கோயிலாக இதை அறிவித்துப் பேணிக் காத்து வருகின்றனர்.

அழகிய பொன்மாலைப் பொழுதில் இக்கோயிலைத் தரிசித்த எங்கள் பயணம் அடுத்து திருவெறும்பூரை நோக்கி நகர்ந்தது.



# போகர் மலை
# தொல்குடிச் சின்னங்கள்

சேலம் நாமக்கல் மாவட்டத்தின் எல்லையில் அமைந்துள்ள பனமரத்துபட்டி அருகில், நாமக்கல் மாவட்ட கடைசி கிராமமான கெடமலையை ஒட்டி அமைந்துள்ள மலை "போதமலை" எனும் போகர் மலை...

இந்த மலை சுமார் 3967 அடி உயரமும், அடர்ந்த காடுகள், அழகிய ஓடைகள், பயன் தரும் மூலிகைகள், மான், மயில், முயல், குரங்கு வனம் சார்ந்த உயிரினங்கள் என அருமையான இயற்கை சார்ந்த இடம்...

இனி பயணம்...

நாங்கள் அதிகாலை 6.00 மணிக்கு பனமரத்துபட்டியில் இருந்து எங்கள் பயணத்தை துவக்கினோம் மொத்தம் அதில் இயற்கை ஆர்வலர்கள், வரலாற்று ஆய்வாளர்கள் என மொத்தம் 25 நபர்கள் , அதில் குறிப்பாக வேலுதரன் சார், கலை, சிவா, செல்வமணி, உதயகுமார், ராஜ் பன்னிர் செல்வம் , குமரவேலு, மூர்த்தி ஆராய்ச்சி மாணவர்கள் என பயணம் துவங்கியது...

வழியெங்கும் வண்டுகளின் ரீங்காரம், குயில் ஓசை, மயில்களின் கூவல், ஆந்தைகளின் அலரல் என திக் திக் எனவும் இனிமையான சுற்றுச்சூழலலுடன்











பயணப் பட்டோம்..
வழியில் காலை எட்டுமணிக்கு காலை உணவு புளியோதரை ஊறுகாயுடன் நண்பர் மூர்த்தி ஏற்பாடு, சாப்பிட்டு உடன் மீண்டும் மலையை ஏறினோம்.

சூரியன் உச்சி தொடும் நேரத்தில் போதமலையின் மேலூர் கிராமத்தை அடைந்தோம். பிறகு கொண்டு சென்ற பைகளை எல்லாம் அங்கே நண்பரின் வீட்டில் வைத்து விட்டு வழித்துணையாக உள்ளூர் மாணவர்கள் பிரகாஷ், ஜோதி குழுவின் உதவியுடன் மீண்டும் பயணத்தைத் தொடர்ந்தோம்.. சுமார் ஒரு மணி நேரம் முட்புதர்கள் வழியாக தவழ்ந்து சென்று மலை முகட்டை அடைந்தால். 5000 வருடங்களாக அவ்வூர் மக்களால் நன்கு அறியப்பட்ட, இந்த அரியத் தொல்குடி சின்னங்கள் எங்கள் கண்ணிலும் பட்டதும்.



ஒவ்வொரு கல்திட்டையும் சுமார் இரண்டு அடிவிட்டமுள்ள இடுதுளைகளுடன், உயரம் 4.5 அடியுடனும் , அகலம் 4.5 அடி, நீளம் 6 முதல் 7 அடி வரையிலான கல்திட்டைகள் சுமார் 28 உள்ளன. அதில் சில சரிந்தும், உடைந்து காணப்பட்டது, நல்ல நிலையில் 10க்கும் மேற்பட்ட கல்திட்டைகள் உள்ளன..

பிறகு அங்கே இருந்து திரும்ப தொடங்கி மேலூ ர் நண்பர் வீட்டுக்கு வந்து சேர மணி மதியம் இரண்டு ஆகிவிட்டது. அங்கே குடிசையில் சுட சுட சைவம், அசைவம் என கிராமத்து சமையல் வாசனையுடன் தயாரிக்கப்பட்டது. அனைவரும் ருசித்து சாப்பிட நேரம் பகல் மூன்றை தொட்டது. கிராமத்தில் உள்ள நண்பர்களுக்கு நன்றி சொல்லிவிட்டு புறப்பட்டு, மீண்டும் வந்த வழியாக நடைபயணத்தை மேற்கொண்டோம். அடிவாரம் வந்து அடையும் போது இருட்ட தொடங்கி விட்டது. சுமார் நான்கு மணி நேரம் நடைக்கு பிறகு அடிவாரம் வந்தடைந்தோம்.

பிறகு எங்களோடு இந்த தேடலை நடத்திய, நண்பர்களுக்கு பிரியாவிடை கொடுத்து இல்லம் நோக்கி புறப்பட்டோம். இதை நாம் தான் கண்டுபிடித்தோம், அப்படி யாராவது சொன்னால் அது நகைப்புக்குறியது. எனவே காட்டுக்குள் மலை பிரதேசத்தின் நடுவில் உள்ள இந்த இடுதுளைகளுடன் கூடிய சுமார் 28 கல்திட்டைகளை வெளியுலகத்திற்கு தெரியப்படுத்தும் பணியில் நாங்களும் சிறு தொண்டு ஆற்றினோம்.

- A.T. மோகன்

சூழியல் மற்றும் வரலாற்று ஆர்வலர்



நமது ஹெரிட்டேஜர் தமிழ் இதழுக்கானக் கட்டுரைகள் வரவேற்கப்படுகின்றன.

1. தொல்லியல் மற்றும் வரலாறு
2. மொழி மற்றும் கல்வெட்டுகள்
3. தமிழகக் கட்டடக்கலை மற்றும் சிற்பங்கள்
4. பயணக் கட்டுரைகள்
5. புகைப்படங்கள்
6. மரபுசார் நிகழ்வின் தொகுப்புகள்
7. பாரம்பரிய உணவுகள்
8. செயற்பாட்டாளர்கள் மற்றும் அறிஞர்களின் நேர்க்காணல்
9. வாழ்வியல்  கட்டுரைகள்
10. பாரம்பரியக் கலைகள்
11. புத்தக விமர்சனம்
12. மரபுசார் பயிற்சி நிகழ்வுகள்
13. வரலாற்று சின்னங்கள் சிதைவு, மீட்பு மற்றும் விழிப்புணர்வு பற்றிய செய்திகள்
14. தமிழக இனக்குழுக்கள் பற்றிய அறியத் தகவல்கள்.
15. ஓவியங்கள்.
16. பாரம்பரிய விவசாயம் மற்றும் கால்நடை பராமரிப்பு.
17. பாரம்பரியத் தொழில்கள்
18. விழாக்கள்
19. ஊர் வரலாறு
20. வரலாற்று முகங்கள்
21. சமயம் மற்றும் இலக்கியம்.

# நமது தமிழக மரபுசார் ஆர்வலர் குழுவில்  இணைந்துள்ள கைவினைக் கலைஞர்கள் மற்றும் தற்சார்பு தொழில்புரியும் நண்பர்களின் விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன.

# மன்னவன் வந்தானடி..

வீடு சேர ஆனதோ
ஆண்டுகள் பல உமக்கு?

கட்டிவைத்த கோவிலிருக்க
கட்டியவன் களவுபோனதென்ன ?

சோழம் சோழம் என்று
ஒரு கூட்டம் தேடுதையா
உம்மை,

எம்மோடு இல்லாமல் நீர்
நின்றதங்கு ஏனோ?

பல சதிகளைக் கடந்து,
ஊர் காண வந்த உன்னை!

பாராட்டி சீராட்டி கொண்டாடும்
கூட்டமுண்டு!

ஆயிரம் ஆண்டுகள் ஆனாலும்,

உமை மறவா நாங்களும்,
உம் பெருமை பேசும் நூல்களும்!

நீர் செய்த பெருவுடையாரை,
தரிசிப்போர் எல்லாம்,

கை கூப்பி வாழ்த்து சொல்லும்,
வாழ்க எம் மன்னவன்,

இராஜ இராஜ சோழத்தேவர் !

கருத்து
வித்யாலட்சுமி





ஓவியம்
சம்யு

ஹெரிட்டேஜர் தமிழ்
மரபுசார் மாத இதழ்
ஜுன் 2018